ணேவவிடுமவைதன்னிலஞ்ஞன்சேனை
யிறந்தபடியதனையுமிங்கியம்பல்செய்வாம், (அ)

வேறு,

உருபகமகளிர்திறத்தினை யுசாவொடுமறப்பொடழிப்
பொடு,திருபகன்மதனையழித்தன னிலவியரதியுமரிக்க
வே,, (௯)

பாவனுமிகலுமிரங்கலில் பாடுறுகொலையுமெரிந்தெ
ழ, கோபனுமடையநலம்பல கூறியபொறையினை
ழிந்ததே, (௰)

மோகனுமுலகுமயக்கற [illegible]
சோகமுமகிழ்வுநசித்தனர் [illegible]ரிக்க
வே, (௰௧)



ஆனசந்தோடனில்லோபனுமாசையும்பேசுகள்வாதி
யு, மானசந்தாபனுமீனனு மானமுஞ்சேர்வுயிர்மா
யுமே, (௰௨)

வேறு,

அறனழித்தனன்மறத்தினையகுசையினைநல்
லமிர்தசிலனுமழித்தனனடக்கமுமதத்
திறமழித்தனனுபேட்சையிலபேட்சைபொடிநத்
றேர்விலேலபெரியடம்பனுயிர்சிந்தியதுவே, (௰௩)

ஆங்கரிப்பரியசாந்தியினழிந்ததுயிர்கட்
கன்னைபோலுமவிரோதமெழவாருயிரையுத்
தீங்கருத்திவிடுமச்சரமழிந்தயரவே
செய்யுமையமழிவுற்றதமிகுந்தெளிவினே, (௰௪)

தக்க[illegible]ோனமுறவேபொடிதமம்பொடிவெறுஞ்
சத்துவத்தின் வருசங்கமுமசங்கமுறநேர்
நிற்குமோவொருமருட்படையருட்படையின்முன்
னிற்கவேதுநினனேதுகுடரோதுநிலையே() ஆ ௫௬௪

வேறு-அஞ்ஞனழிவுவகை.

ஆவியையொழியவெல்லா மழிந்தகப்பட்டவஞ்ஞப்
பாவியையெந்தைபாதம் பணிகெனப்பகர்ந்தபோ
தே. (௧)



அ[illegible]போன்றுமழிவுறுதிருக்கஞானங்,
கி[illegible]கிளர்ந்தெழுமென்னக்கேட்
டே. (௨)

வேறு.

இருணிந்திரவிமுனிற்குமோபஞ்சுதா
னெரியின்முன்னிற்குமோவெங்கனேயரவமுங்
கருடன்முன்னிற்குமோஞானமேவந்துறுங்
கண்ணின்முன்னிற்குமோவெண்ணுறுங்கன்மமே. (௩)

அழியுமிக்காயமுங்கழியுமுன்னிளமையு
மன்புறுங்கிளைஞருமின்புறும்போகமு
மொழியுமிச்செல்வமொன்றுகநீயுன்னியோ
வுடையநாயகனைநெஞ்சுணர்வுறுதொழிவதே, (௪)

வேறு,

தேவர்களுமுனிவர்களுஞ் செழுமறையும் பழைய
வொரு,மூவருமென்றிருந்தனையோமுழுமுதலென்ற
றிந்திலையோ, (௫)



இந்தவுல சத்தினிடர்கெடும்பரிசிங்கெழுந்தருளி,வந்த
னனென்றறிந்திலையோமானிடனென்றிருந்தனையோ,

அதிரோகவழகுடையா னுளுடையான்றுளுடையா
னெதிரேதின்றனையாவியிப்பொழுதேயிழந்தனையே()

வேறு.

நாயனாரடியார்கணவில்வுறப்
பேயனுனும்பெருகச்சினஞ்செய்தே, (௮)

ஞானவேந்தன்வந்தென்னெதிர்நண்ணுற
லானவெல்லையிற்காண்மினென்னுண்மையே, (௯)

என்றவன்மொழியெந்தைதிருச்செவி
சென்றவெல்லைசிரித்தருள்செய்யுமே, (௰)

உம்பரிம்பருவப்பவொளிமிகுந்
தம்பெருந்தன்மைகாட்டச்சமைந்துமே, (௰௧)

வேறு,

பழுதுபடாமறைவானுளோர் பண்டையொரிமூவர்
களின்றுகா,நழுதுபெருவடியஞ்ஞன்மே லாகவியந்
தனனண்ணலே, (௰௨)

வெருவருநான்முகனுதியாவிண்ணவர்மண்ணவர்வேறு
ளோ,ரொருவர்பெருவடிவுணர்விலா னுச்சியின்மீது
முறைத்ததே, (௰௩)

தென்றிசையின்றுயர்தீர்த்ததாள் செய்தருளும்படி
தெரியுமோ,வின்றிசைகின்றனவல்லவோவித்தலமீது
மிருக்கவே. (௰௪)

பெரியவர்தஞ்செயலாவதும் பிறரறிவானறிவேமெ
னத்,தெரியுமதன்றதுதெரிவதஞ் செய்துமுடிந்திடு
திசையிலே, (௰௫)

வேறு.

செறிதரும்பிறவிமுறியவந்திறைவர் திருவிளங்குகழல
ருளுநா,ளறிஞரொன்றுமிலவவலரொன்றுமில வவர்சுத
ந்தரமதடையவே, (௰௬)

பிறிவிலாதகுருபரமனூர்தமருள்பெருகவேயுடையதி
ருவினு,னறிவிலானுடனிவகிலமாயையுயிரடையநூறு
ம்வகையருளுவாம், (௰௭)

வேறு,

சலிக்குமனத்தெழுச்சியறத்தவிர்த்திதம்விட்டகத்தே
சிலுத்தெழு மத்துடிப்பு மறத்திரித்தடையக்கெடுத்
தே, (௰௮)

குறித்திடலற்றிடத்ததனைக்குறிப்பவரைக்கொடுத்தே
கறுத்தவிருட்டனைக்கதுவக்கரித்தனைவிட்டழித்தே ()

குறித்தல்குறிப்பறுத்தலெனிற்குறிப்பழியக்குலைத்தே
மறித்தவிடத்திறட்பரிசத்தகைத்தெனல்மற்றொழித்
தே. (௨௰)

தனிச்சுடரிச்சகத்தொளிரத்தனைக்கெடவக்கணத்தே
பனித்திவலைத் தடிப்பொழியப் பரச்சுடர்விட் டழித்
தே. (௨௧)

ஒருக்கிவிரித்ததிற்சுழல்வுற்றுழற்றுமிருட்டனைப்பே
ரருக்கனுதித் தலக்கணறுத் ததிற்பிரபையிட்டழித்தே



செகத்தொழியத்திரித்தவிடத்தொளிர்ச்சியறச்சிதைத்
தே,விகற்பமறத்தனிச்சுடர்விட்டெரித்தயர்வைக்கெ
டுத்தே. (௨௩)

கலுழ்ச்சிகளிப்பறத்தெளிவுட்கலக்கமிகுத்திகத்தே
செலுத்தல்திரித்தலத்தடையச்சி வச்சுடர்விட்டெறித்
[தே.(௨௪)

தனிப்பிறிதற்றிருக்குமருட்டனிச்சுடர்தற்பதத்தே
யினிப்பிறிதற்றிருக்கவிலசத் திடுக்கணறுத்துவிட்டே

சகப்புரணத்தடிப்பமையச்சமித்திட லுற்றிடத்தே
சுகத்தெளிவிற்சுகப்பிரமை யிற்களிப்பதனைத்தொலை
த்தே. (௨௫)

வேறு,

காயாதிகளேழுமாயாவிசையத்தே
கையற்றறிவின்காரணனுதிகளும்போய்
மாயாவிசையத்தேமாயச்சுகசற்சின்
மயபூரணமேதன்வடிவானதுவந்தே. (௨௭)

கோதற்றமுதாகிக்கூறற்றுணர்வாகிக்
கூறற்கரிதாகிக்கோசப்புலன்மாறித்
தீதற்றவர்காணத்தேனொத்தினிதாகித்
தேசத்திசையாறித்தேறித்தெளிவாயே. (௨௮)

வேறு.

எம்பிரானைவந்தெதிர்ந்தவஞ்ஞனிங்குருமலே
யும்பர்வானுருநிருமலொன்றிணைவ்வொளியொடே.

அல்லவானகாமராசனுதியானசேனையு
மில்லவாகிஞானரூபமாகியேயிலங்குமே. (௩௰)

வேறு.

அறிவறியாமையழிந்தனரோ
யறிவறிவாமையழிந்தனரோ.
பிறிவறியாமைபிறந்தனரோ
பிறிவறியாமைபிறந்தனரோ. (௬௧)

கரக்குழுளத்தவராயினரோ
கரக்குழுளத்தவராயினரோ.
இருக்கைமுடிந்தவருட்பொருளே
யிருக்கைமுடிந்தவருட்பொருளே. (௬௨)

வேறு.

அழிந்தறமாயவிருட்டெலா
மறிவுருவாகதம்மண்ணலார்,
மொழிந்ததுமிங்கொருவார்த்தையே
மூவுலகும்மொருவார்த்தையே. (௬௩)

உழுந்தருளுந்துணைப்போதிலே
யுணர்வுருவாகநப்முச்சிமீ
தெழுந்தருளும்பிருபோதுமே
யேத்துவதென்றுமெப்போதுமே. (௬௪) ஆ. ௬௬௰.

வெற்றிசாற்றல்.

அறிவிலாறுயிர்க்கிறுதிசெய்தமி
னறிஞர்தம்பிரானரியதாளிணைப்
பிறிவிலாதயாமடையமீள்கெனப்
பெரியசேனையுந்திரியமீளுமே. (௧)



காயமாகிவாழ்மாயமாபுரங்
கட்டடங்கவேசுட்டல்கண்டுளோர்
தூயஞானநற்சுடர்விளங்குமெய்ச்
சொருபனூர்பதந்தொழுதுரைப்பரோ. (௨)

வேறு.

அடியேமுள்ளஞ்சுறுப்பதுநல்
லம்போருகங்கள்சிவப்பதுமிப்
படியேவந்துபரனேநின்
பாதங்காட்டாப்பண்டன்றோ. (௩)

செய்யப்படுங்கன்மமுமுலகுஞ்
சிறியேம்வாழ்வுந்தீச்செயலும்
பொய்யற்றிருப்பதெம்பெருமான்
புவியிற்போதாப்போதன்றோ. (௪)

போக்கும்வரவும்பொன்றும்
புழுவார்நரகும்புசிப்பனவு
மாக்கமழிவுந்திருக்கடைக்கண்
ணணுகாதிருக்குமளவன்றோ. (௫)

சாவாகின்றபெரும்பிணிக்குஞ்
சனிக்கும்பிணிக்குந்தமொற்ற
லாவாவென்றுன்றிருக்கரத்தா
லஞ்சேலென்னுமளவன்றோ. (௬)

மூத்திக்கரசேநீயெங்கு
மூழுந்தியிருப்பவிழந்தழலும்

புத்திக்கிலேசந்தலைமிசைநின்
பொற்றாள்பொறியாப்போதன்றே. (எ)

அந்தக்கரணம்புறக்கரண
மவத்தைபலவோடகப்புறமுந்
தொந்தக்கலதியாவையுநின்
றுணைத்தாள்சூடார்சொல்லன்றே; (அ)

சமயாவெந்தச்சமயமுமெச்
சடங்குஞ்சவலைத்தனமுமெலா
மமையாததுநின்றிருப்பவள
மலராதிருக்குமளவன்றே, (கூ)

வேறு.

எவ்வளவுமளவுபடாதிருக்கையுன்ற
னியல்பானதெங்களையெவ்வளவின்வைத்தா
யவ்வளவேயளவாகியிருக்கையெங்க
ளளவாகுநின்பெருமையறிவாராரே, (ய)

கடம்படுமிவ்வுடப்பானைங்கரணமானேங்
கண்டிருக்குங்கரியானேங்காட்சிதீர்ந்த
திடம்படுபேருணர்வானேமெல்லாமானேந்
திருவிளையாட்டிருக்கின்ற செயலிதென்னே. (யக)

அஞ்ஞானமென்னவுமங்கதனாலாய
வனேகபவமென்னவுமவ்வயர்வுதீர்ந்த
மெய்ஞ்ஞானமென்னவுநின்றொருதானியே
விளையாடன்றேற்றுவித்தவிரகிதென்னே. (யஉ)



வேறு.

ஒழியாதபரவொளியாயோங்குசொருபானந்தன்
வழியானசெயலுறுதிவாழ்வன்றேவாழ்வாதல், (யங)

ஆக. சாங.

---

## திருமுடிசூட்டல்.

அடங்காமற்புலனுருகவடியிணையேவெளியான
திடங்காணல்கண்டிருக்குந்தெளிவன்றேதெளிவாதல்.

தோன்றும்வினைவழியொழியத்தோன்றாதபொருடோ
ன்றிச், சான்றதுவேதானொழியத் தற்சிவமாய்நிறைந்
ததுவே. (உ)

வேறு.

எல்லையில்பவவேலைவிர னெறிந்தவாண்மையறிந்தெ
மாற், சொல்லவில்லினிவல்லவாறடி தொழுகையெ
ன்றிவர்தொழுவரோ. (ங)

வீரஞானவினோதனாண்மை விளம்புவார்கள் விளம்பு
மத், தீரனார்தலைமையாளுநாயகர் செம்பொன்மெல்ல
டிசேர்பவே, (ச)

வேறு.

ஞானசக்கிரமெங்குநீர்நடாத்துமென்றுநல்லதா
னாணரத்நமுடிகவிப்பவருளினானெம்மண்ணலே (ரு)

ஞானயானைதாள்கள்சூடிநாயன்மார்கடாமெலா
மானவானவதிசயங்கள்யாவர்கூறலாகுமே (சா)

வேறு.

ஒழிவற்றதன்சோதியுருவத்தைநம்பா
னுள்ளங்கைநெல்லிப்பழம்போலவுடையான்
மொழிவுற்றவிரகேயெனுநின்றுமொழிவார்
முன்னோன்மலர்ப்பாதமுடிமீதுகொள்வார். (௭)

தன்செய்யதிருமேனியேயன்றிவேறோர்
தானொன்றிலாவண்ணமெந்தம்பிரானு
ரென்செய்தவாறோவிதென்னென்றுமொழிவா
ரென்னேயிதென்னேயிதென்னேயிதென்பார். (௮)

பொருளேதுமிவரன்றிவேறில்லையென்பார்
போதங்காணீர்செய்யபொன்மேனியென்பா
ரருளேகாணீர்வந்ததிருமேனியென்பா
ரளவாவதேயிந்தவருளென்றுமொழிவார். (௯)

பொய்யோடுமெய்யேதுமில்லாதபெருமான்
புவனிக்கணெம்மைப்புகுந்தாளவிதுவு
மையோவொராளவாவதேயென்றுமொழிவா
ரருளோவிதருளோவிதருளோவிதென்பார், (௰)

எண்ணாதபெருவாழ்வெமக்கானபெருமா
னெழுதப்படாமேனியிதுகாணவெங்குங்
கண்ணானதில்லையேயெமக்கென்றுமொழிவார்
கண்ணல்லகாணாதகண்ணென்றுமொழிவார். (௰௧)

எயாதவெமையாளுபெருமானையென்னே
யிரும்பானவுடல்கொண்டெவ்விடனெங்குமெங்கும்



வாயால்வழுத்தாதிராநின்றவென்பார்
மலர்ப்பாதமீதுள்ளமாலாகிவாழ்வார், (௰௨)

அருகேசெலச்செல்லுவாரஞ்சிநிற்பா
ரஞ்சாதுசென்றாலுமெஞ்சாதுபுல்லற்
கொருகோடிகையில்லையேயென்றுமொழிவா
ரொன்றானுமாராதுகாணென்றுரைப்பார். (௰௩)

வேறு.

அன்னேயங்கவர்கள்செயலென்னுலிங்கொன்
றறையுமளவிலகண்டேயறியினல்லா
லின்னேதங்குறைகாலங்கழித்தாரென்ன
விக்காலமென்னையெனவியம்பவுற்றே. (௰௪)

செய்தருளும்படிக்கிஃதுமன்றேதீர்க்கை
தேசிகனுக்கொருபொருளோதிரித்தல்பின்னு
முய்தரவந்தருளுகழலுவந்துவாழ்த்தி
யுடம்பெடுத்தபயன்சிலநாளுறுதற்கன்றோ, (௰௫)

முழுத்தியவன்பர்கண்மலர்த்தாண்முடிமேற்சூட
மூவர்களுந்தேவர்களுமுழுதும்போற்ற
வெழுந்தருளியிருந்தனனிங்கிறைவன்செய்த
வியல்பிதுவென்றிறைவிபதத்திறைஞ்சலுற்றே (௰௬)

எனக்கினியசொருபானந்தனையெங்கோனை
யேத்தியவன்புகழினையேயியம்பாநின்ற
வுனக்கினியென்செய்வேனென்றிறைவியன்போ
டுச்சியைமோந்திடுந்தழுவுமுவகையுற்றே. (௰௭)

வேறு.

உடையசோதியினின்மாசறவினுநிலனிலோ
ருருவமாய்வருமகாசொருபனுருடையசி
ரிடையருதருகியோதிடுதலேயுவமையா
மிதனைநீபெறுகெனவிறைவிதானருளியே. (௰௮)

ஆக. சாலட்க.

களங்காடு.

இலகுநாயகிதனாருளதாம்விழியினு
விறைவனார்செயலிதாமெனவினையருளவே
யலகைபோயடையயோகினிகளாவருளினு
னடிதொழாவமர்செய்மாகளமெலாமளவியே. (க)

வேறு,

ஓராதமயலார்விட்டொழிந்தபோதே
யுடனுகும்பிணிதன்னையொழியாச்சுற்றம்
பேராதவந்துவங்கள்போதல்துக்கம்
பிணம்போகப்போமாபோற்காண்மின்காண்மின் ()

தொத்தறவேமனந்திஞ்சப்புலன்களைந்துந்
துஞ்சியவாறஞ்சுமிழ்வாயஞ்சுஞ்சேரக்
கத்தறவேயடிக்கழுத்தையரியமாய்ந்த
களையன்றகட்செவியொத்தல்காண்மின்காண்மின் (௩)

மைப்படியுநறுங்குஞ்சிமாயைமாய
மாய்ந்தபடியகிலமெரிமருவவேரிற்
கப்புடனுங்கிளையுடனுமரநேராகக்
கரிந்துபட்டமையொத்தல்காண்மின்காண்மின். (௪)



அவிழாதபிணியாக்கையுடையவஞ்ஞு
னழிந்தபடிதான்சாவவுலகமெல்லாங்
கவிழாதோவென்னுமுனாயார்க்குமேற்கக்
கரமணிபோற்காட்டியவாகாண்மின்காண்மின். (௫)

நெய்விட்டகருங்குழலார்தம்பால்வைத்த
நெஞ்சொழிந்தாலாய்ப்புலன்சேரின்பநேராக்
கைவிட்டாரொழியாவானந்தபோகக்
காமுகராய்முடிந்தபடிகாண்மின்காண்மின், (௬)

இணைப்பரியபேரின்பந்தன்னின்மூழ்கி
இன்புறப்பட்டெவ்விடத்துமெக்காலத்துங்
கணப்பொழுதுமின்பமிலாவுடம்பரிசம்பங்
கைவிடனித்தமைகாட்டல்காண்மின்காண்மின். (௭)

செற்றவர்கடம்முடனுஞ்செறுதற்கென்றுஞ்
சிந்தைசெயுந்திறன்மறந்துசிறப்பேசெய்யக்
கற்றவர்தம்முடனைபிறவியெல்லாங்
கரிசறுத்தபெரியசினங்காண்மின்காண்மின். (௮)

வேறு.

பழிப்பாயொருக்காலுமிதுகொண்டுகொளவுற்ற
பயனற்றபொருள்விட்டெலா
மழிப்பாலுமழியாதபொருள்பேணியிவருற்ற
வாராமைகாண்மின்களோ. (௯)
ஓராகமேபண்டுவடிவென்றிருந்தார்க
ளுணர்வுற்றுமொழிவுற்றதோ

நேராகவுந்தங்கள்வடிவானதிவர்நேதி
நேதித்தல்காண்மின்களோ. (௯) ஆ. ௫௩௪.

---

கூழடுவோர்.

இந்தக்களன்பட்டபாட்டிற்கு நீரொப்பிடத்தேடடா
தீசனூர், சந்திக்கவிதுபட்ட தொப்பேபெருங்கூழ் ச
மைப்பாரையழைமின்களே. (௧)

வேறு.

சாந்தியுளவருதாந்திவந்தடிதந்தார்திருவருடன்னோ
டே,மாந்திநல்லறிமாலாய்கூழடவாரீர்கூழடவாரீரோ.

வேறு.

பொறையேமிகவருநிறைவிபுகழ்புனை பொன்னியரு
ளிணையுன்னியக்,குறையாநிறைவுறு திருவிகூழட வாரீ
ர்கூழடவாரீரோ. (௩)

மேலோரொடுமிகுமுறவிதீவினைமிகுவாரொடுவிடுது
றவியம்,மாலோரொடுவருகருணைய்கூழட வாரீர்கூழ
டவாரீரே. (௪)

முடிவேதிதவருமுதலேதெனவொரு மொழியானள
விடமுடியாத, வடிவேயுடையதொர்மதியேகூழடவா
ரீர்கூழடவாரீரோ. (௫)

தன்போலெவரொடுமன்பேவிளைவதொர் தாயேபவ
மெனுமாயாவி,வன்பேகெடவருமன்பேகூழடவாரீர்
கூழடவாரீரோ. (௬) ஆ. ௫௩௭.

---



வேறு-கும்முலக்கை.

ஒருமையெனமுன்வகுத்தசித்திரமாகிய
வுலகவுரலையமைத்துலக்கையாகவிவ்
வுலகர்பழவினையொடித்தொடித்துநீளெயி
றுதிர்செய்தரிசிபுடைத்திடித்துமேலவர்
பெருமைமுடியையடுப்புவைத்துமேவுறு
பிணிசெயுடலைகுடத்துலைச்செய்தாருயிர்
பெரியவிருளைநெரித்தெரிப்பதாய்வினைப்
பிதுசெய்தமிர்தமினிச்சமைக்கவாருமே (௧)

பரவையுலகமனைத்துமுற்றெமாருயிர்
படர்செயுடலமெடுத்தழித்துநோயொடு
பகலொடிரவுபசித்திளைத்திடாவகை;
பவமெனிருளையறுத்துதித்தசோதிசெ
யரவமறைகள்சிரத்தினிருத்தமாடிய
வரியம்சாருபனெனக்குவைப்பனாருயி
ரமலரடியர்சிரத்தின்வைத்தமாமணி
யடிகள்பரவியுலக்கைகுத்தவாருமே. (௨)

வேறு.

அருவனாயாயிரஞ்சிரங்கொண்டருமறைகளறியாத
சொருபனையாங்கண்டனமே கும்மேலோகும்முலக்
காய். (௩)

மாயவடிவள வாகிமதியிலியாவுழல்வேற்குத்
தூயவடிருட்டினன்காண்கும்மேலோகும்முலக்காய்;

பின்னமொழிவகைபுகுந்தென் பெருங்கருணைப்பெரு

மானுர், சொன்னமொழியொன்றேகாண் சும்மேலோ
சும்முலக்காய். (௬)

நம்மாலேகாண்கின்றநாமும்போய்நாமாகிச் [ய்
சும்மாதேயிருந்தனங்காண் சும்மேலோசும்முலக்கா

வாய்றுடங்குமுலகுதனின் மன்னுசராசரங்களெல்லா
ந், தோன்றுமிடன்பிறிதுண்டோ சும்மேலோசும்முல
க்காய். (௭)

உலகாகியுயிராகியுணர்வாகியொருபொருளே
துலகாமைகண்டாயேசும்மேலோசும்முலக்காய் (௮)

வல்லவகைபரனருளேவரியாரப்போற்றுதே
சொல்லுவதுபிறிதுண்டோ சும்மேலோசும்முலக்கா
ஆ சசரு. [ய்.(௯)



கூழ்வார்ப்பு.

மிடையிருவினைகள்பற்கள்மேவருமறியார்பற்கள்
அடையவுமிடித்திராகினடங்கலுமுலையுட்பெய்யீர். ()

இழைக்கும்வல்வினையெரித்திங்கென்பெலாமுருக்கியு
ள்ளங், குழைக்குமெய்ப்பத்தி வந்து குறைவறக்குழை
க்கச்சொல்லீர். (௨)

செப்பாதேபலவுநின்றுசிலுப்பறவிருத்தியின்பந், தப்
பாமேபதத்தைப்பார்க்கச்சாந்தியையிருத்திக்கொள்
வேறு. [ளீர்.

கனிதனக்குநிகர்நெக்குநெஞ்சுகள்
கரைந்துகன்னலொடுபாலுமொத்



தினிதினிப்படியடைமத்தபோனக
மெடுத்துமெத்தெனவிருத்துமே. (௪)

தண்மையாரும்வகையாளுமாளுடைய
தம்பிரானரியதாள்கடா
மூண்மையானுரியவன்பரின்புறு
முளக்கலங்களைவிளக்கியே. (௫)

கடங்களோடுமுளமானமெய்ப்பரி
கலங்களோடுமுளவாவிதா
னடங்கநீயமிர்துசெய்கவென்னவரு
ளையதானமிர்துசெய்யுமே. (௬)

அணங்குதன்றிருவுளப்பிரசாதமிது
மடையவேறிறையவயிலுவி
ருணங்குகின்றவுடலானபேய்களையு
முடையநீரழையுமுண்ணவே. (௭)

வேறு,

வெந்தவுடலம்விடும்பரிசு வீடுவினவிமிகப்பசித்து
வந்தபேய்க்கும்பசிதீர வாரீர்மெத்தவாரீரோ. (௮)

நசித்தேனிந்தக்கணத்துள்ளே நசியாவண்ணநல்கிமிக
ப், பசித்தேனென்றுபதைக்கின்றபதைப்பைத்தணிக்
கவாரீரோ. (௯)

துரியாதிதம்பதினுலிற் றேன்றியெவர்க்குந்தோன்று
த, பெரியார்தம்மையானென்னும் பிரமப்பேய்க்கு
ம்வாரீரோ. (௰)

ஒளிதங்கியமாமறையோதியுள்ளபொருளையுணராதே
பளிதஞ்சுமந்தகழுதையதாம்' பனவப்பேய்க்கும்வா
ரீரோ. (௰௧)

படித்துமறைகள்பொருட்படுத்திப் பயனினெட்டி
ப்பாராதே, வடித்தகிளிபோல்வருமாயா வாதப்பே
ய்க்கும்வாரீரோ. (௰௨)

வேதாகமங்கள்சொன்னபொருண் மெய்யேயறிவார்
போன்றிருந்து, பேதாபேதஞ்சாதிக்கும்பெரும்பே
ய்தனக்கும்வாரீரோ. (௰௩)

சுத்தப்பிரமமதுநிற்கத் தொள்ளைச்செவியினுணவா
ண, சத்தப்பிரமமென்றோதுஞ் சளப்பேய்தனக்கும்
வாரீரோ. (௰௪)

பணியப்படுவாருள்ளிருக்கும் பரதேவதையைப்பா
ராதே, மணியைத்துலக்கிக்கினுகினென வரும்பேய்
தனக்கும்வாரீரோ. (௰௫)

ஞானம்போலச்சிலசொல்லி நாடற்கரியமுத்தியினு
ந், தானுஞ்சிவமும்பாசமுமாஞ் சைவப்பேய்க்கும்
வாரீரோ, (௰௬)

எட்டுக்கருமமுட்டச்செய் தெட்டுக்குணத்தோரொழி
ன்முத்தி, வட்டத்திருக்கப்போமுத்தை வாய்ப்பேய்
தனக்கும்வாரீரோ. (௰௭)

வெறுவாய்கொண்டுமென்றுமனவிகாரங்கொண்டுசில



பிதற்றிப், பெறுவாரன்றிமுத்திபெறும்பிடகப்பேய்க்
கும்வாரீரோ. (௰௮)

உடல்கைவிடுகைமுத்தியெனவுரைத்தவுண்மையுணரா
தே, முடலையுடலையானென்னுமுழுப்பேய்தனக்கும்
வாரீரோ. (௰௯)

தியக்கந்தீர்வார்நன்முத்தி சேர்வாரொன்னுந்திறன்கே
ட்டு, மயக்கஞ்செய்யும்வாமப்பேய் வாய்க்கேநெருப்
பைவாரீரோ. (௨௰)

அச்சந்ததிகளெல்லாமாயல்லாதிருக்குமறிஞாயு
மெச்சந்ததியுந்தமக்கன்றென்றியம்பும்பேய்க்கும்வா
ரீரோ. (௨௧) அடி ௪௩௭

---

வேறு- குணலைவாழ்த்து.

நின்மலன்கருணையானடங்கவு
நெஞ்சறிந்திடநிறைந்தபின்
பொன்மலர்ந்தவிருதாளினல்லவருள்
புகழுவாருளன்மகிழவே. (௧)

வேறு.

பாவிடைநூல்படுசிந்தைதனிற்
பரப்பறவந்துபராபரனார்
சேவடிதந்தமைபாடீரோ
செய்யகருணையைப்பாடீரோ. (௨)

மீட்டவிரகினைப்பாடீரோ
விளம்பியதொன்றென்றுபாடீரே

நாட்டவருளினைப்பாடுமோ
ஞானவினோதனைப்பாடுமோ. (௩)

என்னையொளித்தமைபாடுமோ
யென்னுயிருண்டமைபாடுமோ
தன்னையளித்தமைபாடுமோ
தத்துவநாதனைப்பாடுமோ. (௪)

துன்னிநிறைந்தொழியாதுநின்ற
சொருபானந்தச்சுடர்வையத்
தன்னினடந்தமைபாடுமோ
தானெனையாண்டமைபாடுமோ. (௫)

ஞானமுஞேயமுனான்றுமென்று
நாடிடவொன்றின்றிநின்றதுநா
மானமுழுநலன்பாடுமோ
யல்லிலாதமைபாடுமோ (௬)

மதியிலியாவுழல்கின்றநமை
மானுடனாயவனாளவந்த
வதிசயமேநினைந்தாடுமோ
யார்த்தெழுந்தார்த்தெழுந்தாடுமோ. (௭)

என்றிவையேமிகப்பாடிப்பாடி
யெழுந்துவிழுந்தெழுந்தாடியாடி
நன்றிதருங்கணனானதெலா
நானாவிதம்படநட்டமிட்டே: (௮)



வேறு.

வரவுதிரிவறுபழையவழியொழியவருளுங்
குரவனடிபரவியிடு குணலைபலபலவே, (௯)

உரைகழியவுளனழிய வுணர்வழியவணையுங்
குரைகழல்கள்பரவியிடுகுணலைபலபலவே. (௰)

மதமதெனவிழிசொரிய மயிர்புளகம்வரவே
குதிகுதென்வுளனுமிடுகுணலைபலபலவே, ௧(௰)

கொடியபவமுடிவுசெயக்குரைகழல்கள்பரவா
முடியவிவரிடுகுணலைமொழியமுடிவிலவே. (௰௨)

வேறு,

பிணக்கிடுமாறுசமயங்கத்திப்
பேரிருள்சேர்மனன்கொண்டுநின்று
கணக்கிடுமாறுதவிர்த்தபிரான்
கழலிணைபாடிக்களித்தனரோ. (௰௩)

வேறு.

பாசமலமறவருளுபார்வையான்வாழியே
பாடுமறைமுடியினடனாடுவான்வாழியே
வாசமலரானமுழுதுமேவினான்வாழியே
மாகரமிவரியவிருதாளினான்வாழியே. (௰௪)

கோசமொடுமுழுதுமிறநூறினான்வாழியே
கூறவிரகரியதனையோதினான்வாழியே
நாசமறுமறிவுருவமாயினான்வாழியே
நாடின்றுகழல்நிகழ்மேனியான்வாழியே. (௰௫)

வேறு.
நினையுமாறதின்றிநின்றிலங்குசோதிவாழியே
நேசமோடுமீசனென்னநெஞ்சிலாதவஞ்சனு
மெனையுநீதியன்பரோடுவெந்தநாதன்வாழியே
யென்னையாளவந்தகோலமென்றும்வாழிவாழியே, ()

பந்தபாசம்வேரொடும்பறிந்துவீழவென்றலை
தந்தபாதம்வாழியேசமைந்தபார்வைவாழியே (௰எ)
வேறு.
வைத்தவைத்தகணழித்தவடிவாழியே
வைப்பிலாதகணளித்தவடிவாழியே
யெத்திமுத்தியருளீசனடிவாழியே
யென்னையாளுடையவெந்தையடிவாழியே. (௰அ)

சுத்தமறைதொடர்ந்ததாளினன்வாழியே
சுற்றுவருபெரும்பாவநாசனிவன்வாழியே
தத்துவநெறிதிறந்தசேவகன்வாழியே
தர்க்கசமயசண்டமாருதன்வாழியே. (௰௯) ஆகூ சு அகூ.

---

தனியன்- நேரிசைவெண்பா.
தரணிபுகழ்தத்துவனர்தாமுரைத்தஞானப்
பரணிதனைக்கட்டவிழ்த்துப்பார்க்கிற்- கரணமுடன்
சேர்த்துமணவாதுசிவமணமேபூரித்துச்
சார்த்துமணநாறுமேதான்.

அஞ்ஞவதைப்பரணிமுற்றும்.



பதினேழாவது
# மோகவதைப்பரணி.
கடவுள்வணக்கம்.

மதிபரிதியெரிநீர்கால்வானவனியியமானன்
வடிவாயெல்லா
வதிபதியுமாயனைத்துமாகியல்லாவறிவுருவை
யகத்துள்வைப்பாம், (௧)

சொல்லாற்றம்மதிவிரகாற்றாயதிதுதியதிது
வென்னுமார்க்க
ளெல்லார்க்குமதுவதுவாயிறையிருக்கும்படியேயா
யிருக்கவென்றே. (௨)

விழுமதிநம்பாவுலகில்வீடுபெற முயல்பவர்க்கு
வேதநான்குத் [ரைத்
தொழுமதிநம்பாலதெனவிளமதியோன் றணிந்தவ
தொழுதல்செய்வாம் (௩)

பேதமதியுளதாகிப்பிணங்குமதியிருள்போகப்
பிறிதொன்றில்லா
வேதமதிசயமாகவிளம்புநிரதிசயமதி
விளங்கவென்றே. (௪)

வேறு.
கடியவினைமேவுகாயமனனுறி
கரணவசுமோசர்கணமெலா
முடியமறமேவிமுனியுமறிவாழி
முதல்வனிருதாள்கள்பரவுவாம். (௫)

கலகமதனுதிபடையதிபராவி
கழியவொழியாதகருணையா
னுலகமிடர்மாறவுள துணர்விவேக
வொளிநயனவாளியுதவவே. (௬)

வேறு.

அகமுளரிதனினுதவுமகிலவுயிரகமுளரி
யகமறைகளுன்
முகமுளரியெனமுனிவர்மொழியுமுனிபதமுளரி
முடியிலணிவாம். (௭)

எழின்முளரியொழியவருமிருமுளரியருளியிறை
யிருவினையெலாம்
விழிமுளரிகொடுபருகிமொழிமுளரிமலருநலன்
மிகவிளையவே. (௮)

வேறு,

நுறைகூறுபடுமாறுசுழலாறு கனல்கானலொளியான
நான், மறைகூறுமதஞானடணநாடவருப்யானைவலி
பாடுவாம். (௯)

சலமானகைபலமாகமலைவாதி லலையாதுதலைமைநாடியே
நிலமாகவெண்ணியாளிகழல்சூடியுள ஞானநிகழ்வாகவே
மதியாளிசமயாதிவழியாறு மிறகாலின்மறுகாலிறுங்
கதியாகுமெனவாறு முசமாகியருள்காலை கழல்பாடு
வாம். (௰௧)

நலவயாகுமதுசால நல்லுகுமிதுவாத மெனுமாறு



போ, யிவையாவுமெமதாகியெவரோடுமெவிரோதமி
லைசவாகவே. (௰௨)

வேறு.

வனதையுனாயில்வழுநறவுவிழைவுகளவெனவொழுகு
மயல்கணிணையுங்
கதையுமறவறிவருளுகமலமலர்வருகமலை
மலர்கருதுவாம். (௰௩)

ஒழியவருமுடலினுடனெருகலவியறவுதறி
யுயிர்களுணர்வோர்
மொழியவருமறுகலறுபதமதெனுமுலகுகளின்
முடிவுபுகவே, (௰௪)

வேறு.

ஒன்றுமாய்வறநிற்பதில்லை
யுளத்தொழுங்கறயாவையும்
பொன்றமாய்வதுமுத்தியென்றருள்
போதியானடியோதுவாம். (௰௫)

உரையுணர்ச்சியினுனிகழ்த்துவ
தொன்றுமற்றதுவாகவே
திரையெனப்பிறழ்கின்றசித்த
விகாரமானவைதீரவே. (௰௬)

வேறு.

அகிலவுலகுயிர்கருவிவிளைபொழு
தலடயமலர்வதருவிவதாம்

பகலுமிரவுமொர்பணியுமறவொளிர்
பரிதியிருகழல்பரவுவாம். (௰௭)

குரவனடியிணைமருவியுலகவர்
கொடியபவவிருள்குலையுமா
திரவுபகலறநிகழுமறிவொளி
யிதயவெளியினினிலகவே. (௰௮)

வேறு.

கஞ்சமகளாய்நுகர்தல்காமுறுமுளத்தே
கலைமகளுமாயினியகற்றவருளத்தே
விஞ்சைமகளாய்விமலயோகியருளத்தே
விளங்குமொருமானடியுளங்குளிரவைப்பாம். (௰௯)

ஐந்துபுலனுக்குமிசைவாகவிறைபொற்று
ளறுசமயநூலின்முடிவற்றபொருள்காண
வுய்ந்துபுகுமுத்திமையுடம்புடனுளத்தே
விளங்கிடவுளங்கையின்விளங்கனியையொத்தே. (௨௰)

வேறு- வாழ்த்து.

வாழிசொருபனெனையாளுகழறரணி
வாழவருதரணிவாழியே
வாழியெனதிடமாறவடிவுகொளு
வாழ்வுவருகுமனாவாழியே. (௧)

வாழிசொருபனடிசூடிநிலன்மிசையின்
வாழுமடியவர்கள்வாழியே
வாழியருளின்வழுவாதவறநெறிசெல்
மாசிறவமுனிவர்வாழியே. (௨)



வேறு.

வாழிபழுதொன்றிலாமறைவாழியிறைதந்தவாகமம்
வாழிமுறைவந்தமாமனுவாழிபதினெண்புராணமே.

வேறு,

ஒண்பொருளைநாடியிந்நிலன்வாழ
வொண்டரளம்வாரியெங்கணுந்
தண்பொருனைவீசும்வண்குருகையாளி
தந்ததமிழ்வேதம்வாழியே. (௪)

வேறு.

ஆரவாரமறவொருவார்த்தைசொ
லங்கணனைநினைதொறுந்தங்கணீர்
வாரவாரவழுதருள்வாதவூர்
வள்ளலார்திருவாசகம்வாழியே. (௫)

வேறு.

ஒழிவினருண்மாதுதிருமுலையினூறு
முணர்வுபரபோதவமுதுண
மொழியின்மணநாறவருளுமறைஞான
முனிவர்தமிழ்மாலைவாழியே. (௬)

வேறு.

பாதமுடிதேடிருவர்பாலுமணுகாவொருவர்
பாதமலர்சூடியருள்பெரு
நாதன்மொழியானவணிவீடுபெறவோதுதிரு
நாவரசர்பாதம்துவாழியே. (௭)

வேறு.

நினைவினரிதாகிநெறியிலெளிதாகு
நிமலநிறைவானபொருளையோர்
வினையிறனிதூதுமறுகிடையினேவு
விமலர்தமிழ்மாலைவாழியே. (௮)

வேறு,

செடிகொண்மாயப்பிறப்பிருடீர்ப்பவன்
செய்யதாமரைப்பாதமுன்சேர்ந்தவெம்
மடிகள்சாத்தியவண்டமிழ்மாலைக
ளமலவாரியமாலைகள்வாழியே. (௯) ஆக ௨௯.

கடைதிறப்பு.

---

பண்ணார்மொழியமுதந்தருபவளந்திறவாதே
கண்ணாலுயிருண்பீர்கடைதிறமின்கடைதிறமின். (௧)
உருவாய்வருபெருமானையுளங்கொண்டெவருடனுந்
திருவாய்மலர்திறவீர்கடைதிறமின்கடைதிறமின். (௨)
நீராவியின்முழுகுந்திமலந்தானுமதிருகண்
ணீராவியின்முழுகித்தனிநிற்பீர்கடைதிறமின். (௩)
அடையத்திரிபுவனத்தையுமளவற்றுளநயனக் [ன்
கடைவிட்டயில்பவர்பொற்கடைதிறமின்கடைதிறமி
மலர்பொற்கழன்மலரிட்டிறைமதியைப்பருகிடவே-
சிலர்சித்திரமெனநிற்பவர்திறமின்சடைதிறமின். (௪)
எளிவந்தருளிறைபொற்பதமிருகட்புலனுகரக்
களிவந்தவர்கனகக்கடைதிறமின்கடைதிறமின். (௫)



வேறு.

தணந்தபோதுமுமைப்பெறாதுதலைப்பதந்தருதம்பி
ரான், மணந்தபோதுமுமைப்பெறாதுமயங்குவீர்க
டைதிறமினோ. (௭)

வேறு.

அகிலபுவனமுமுடையவனருளினு
னமரர்பெறலருமமுதினைநுகரவே
துகிலுமணிகளுநெகிழ்வுறவிழியுளே
சொருகுமறிதுயிலுடையவர்திறமினோ. (௮)
அரிமுனிடவுணுமமுதலவிதுபெறு
தவனுமலன்வருமமுதெனவமரர்தா
மெரிமுனெழுகெனவுருகினுமடியரா
யினியமொழியமுதருள்பவர்திறமினோ. (௯)

வேறு.

எஞ்சவுலகங்களமிர்துண்டகளிதன்னினிறையோனிரு
கழற்,கஞ்சமலர்கொண்டகளிவிஞ்சவருவீர்கடைதிற
ந்திறமினோ. (௰)
மெய்தழுவவுங்கணிலையுங்கலையும்வீழ்வுறவிரும்பியி
றைமுன், கைதொழுதுநம்மையுமிழத்துருகுவீர்க
டைதிறந்திறமினோ. (௰௧)

வேறு.

சமயவிதமளவறவுளதுறைதொறு
தமரமிகவருகலைபலமொழிதரு
சகலவினைகளுமுதவியவுலகுறை
சரமுமசரமுமெனவருமுயிரவை

யமையுமுடல்கமொறுளவகமுளரித
னமருமகமென மருவிமுனைறைதரு
மகிலமுதவியவறிவனதடிபணி
யமரவனிதையாணிகடைதிறமினோ. (௰௨)

உணருமுனிகணமடிசயசயவென
வுரைசெய்துதியொடுதொழவளவறுசிர
முடையவுபநிடமுவகையொடுரைசெய
வுளமெய்யுணர்வதிசுகமொருகணாயறு
புணரியொருதனதிடமெனவிதமுறு
புவனமுழுதையுமமுதுசெய்தறிதுயில்
பொறிகொளரவணைமிசையமர்பரனடி
புகழுபுனலரமகளிர்கடிறமினோ (௰௩)

அசையுமுடலினினுரவியநெகிழ்வன
வவனிபுனல்சுடுவனவசைவனவன
லனிலமிடைவெளிககனமுனுருவல
வறியுநயனமுமுருவறிகருவிய
திசையுமொழிபுலனவைமனமுதல்களு
மிணையவுயிரமுழுவதுமறிவல
வெவையுமறிவறிவருவெனுமிறைகுண
ரசிதவனாயரமகளிர்கடிறமினோ. (௰௪)

உதயவனாயரமகளிரெமிரவிமு
னுடுவுமவரதிபதியெனுமதியமு
மொளிர்வதிலருலகிருள்கெடுவதுமிவ
னுதயமுறிலிவனலதிலதின்றயென



விதயவெளியினிலைபெறுமறிவுரு
விரவுபகலறுமிரவிமுனிகழ்கில
ணிவனுநிகழ்வதிவ்விறையொளியினிலென
விவனைநகும்வனிதையர்கடைதிறமினோ (௰௫)

பரவுபுகழ்பழிபெறலிழவுறவயல்
பதுமைபுணர்வவள்பிரிவுறலுகலுயிர்
பலவுநிலைபெறனிதனமெனிதினெரு
படியுமகிழ்வறநிகழுளமுடையவர்
வரவுதிரிவறநிறைவுறுமறிவுதம்
வடிவதெனவனுபவமுளமுனிவரர்
மதுரமொழியமிர்தினைநுகர்வுறவுள
மகிழும்வனவரமகளிர்கடிறமினோ, (௰௬)

வேறு.

வீரஞ்சிறந்தசிலையநங்கவேளைவெந்கண்டருளியவோ
ங், காரஞ்சிறந்தகன தனத்தீர்கனபொற்கபாடந்திற
மினோ. (௰௭)

நல்லாதரத்துமைந்தர்க்குநாவாலன்றிநயனத்தாற்
சொல்லாதெல்லாஞ்சொல்லுவீர் சுடர்பொற்கபாட
ந்திறமினோ. (௰௮)

ஐயங்கொண்டுநடுத்தேடியறிவோரறியப்போதமண
ங், செய்யுங்கொங்கையருளுவீர்செம்பொற்கபாட
ந்திறமினோ. (௰௯)

கன்னிநாடுஞ்சோறுமெங்கவலைதீரும்வகைவந்தென்

சென்னிநாடும் பதம்பாடச் செம்பொற்கபாடந்திற
மினோ. (உஉ)

வன்னியன்னவிறன்மோகன் மாளவந்த மலர்ப்பதத்
தென், சென்னிகொண்டபிரான் வென்றகளம்பொற்
கபாடந் திறமினோ, (உஙு) ஆக ருய.

காடு.

எனையாளவுருவாகிவருகோலவருண்மாது
மவள்பேயும்வாழ்
நினையாமுன்மனன்வேவவழன்மேவுமொருபாலை
நெறிகூறுவாம். (க)

மண்மாளுநீர்மாளுமெரிமாளும்வலிமா
ளுதம்மாளுமேல்
விண்மாளுமாளாததொன்றில்லைநிலையாமை
யழ வேவவே. (உ)

இருடாவும்வன்னெஞ்சர்தன்னெஞ்சமொன்றில்லை
யார்கண்களுங்
குருடாய்விடுந்தீயகடமண்டுகோபக்
கொடுந்தீயிலே. (ங)

எத்தீயிலுங்காமவெந்தீ கடஞ்சேரிடும்பைக்கெலாம்
வித்தீயுமதுசாடரத்தீயுமவ்வாறுமேல்கொள்ளுமே()

நாசஞ்செய்பவவன்னியழலாற வருண்மாதிருமங்க
நேசஞ்செய்மொழிமாரிபொழிபோது [ளா
மொருகண்ணுநீரில்லையே. (ரு)



காயத்திலுயிர்காலவனல்வெளவுமழல்மாற
நிழல்கண்ணிதன்
னேயத்தினருள்செய்யபாதத்தவர்க்கன்றி
நிழலில்லையே. (சா)

வேறு.

குறுகினண்டரழிவரென்று மொழிவதென்கொல்கொ
டியதீ,முறுகினண்டமுகடுகொண்டமுளரியானுமுனி
யுமே. (எ)

சருகியிந்துநிறனழிந்துகடமெழுந்தகனலிலே
யுருகியந்தவரியுமென்றுமுதறியின்கணுறைவதே.(அ)

கலையிலங்குமரனையும்பர்கடவுளென்றுவிடுகுதோ
மலையினும்பர்புகினுமண்டுமதனவங்கிவிதனமே(கூ)

தனாயினின்றவவையினும்பர்தருவுமில்லைசுகதர்த
மரசுமில்லையுளாசெய்பந்தவனலிலெங்குமழியுமே()

அழியுமிந்தவனலினைந்தவுலகுமென்றவருகர்தா
மொழியுமந்தவருகர்பிண்டிமரமுமில்லைமுடிவிலே()

வேறு.

உள்ளிற்பாதிப்பொழுதும்பிரிந்
திரோனென்றுண்பேய்க்குளாக்கும்பேய்க்
கள்ளிப்பாவையல்லாலோர்
கள்ளிப்பாவையில்லையே. (யஉ)

பொருவிறந்தவானவரும்புகன்றவிந்தக்கடத்தியை
வெருவியன்றேயிறப்பில்லா வெளியாம்வீடும்விரும்
புவரே. (யரு)

வேறு.

உன்னவரிதாயதிருவுருவுதனை
யுணருமதிமானெறியமானுமில்லை
பன்னுகலையொழியவொருகலையுமில்லை
பரமாம்ஸமென்பதல்லாற்பறவையில்லை. (௰௪)

பெருகிவருதிருவுள்ளக்கருணைநீரும்
பேணுமடியவர்தமதுபெருகுமன்பா
லுருகிவருகண்ணணீருமில்லையாகி
லுலகிலுயிருப்வதற்கோருபாயமுண்டோ. (௰௫)

வேறு.

தம்பிரானிருசெங்கமலப்பதந்
தங்கிடாமனனேயித்தழல்வன
மெம்பிரானையுன்னுதவுயிர்களே
யிவ்வனத்தினியங்கிடும்பேய்களே. (௰௬)

கோட்டம்.

துப்பிலாவலகைக்கணஞ்சேர்புறஞ்
சோலையைச்சிலசொல்லினஞ்சொல்லுதற்
கொப்பிலாளுறைகின்றவுட்சோலையை
யுரைப்பதன்றதுவுஞ்சிறிதோதுவாம். (௧)

தாயும்பூதலத்தென்னையுமாண்டுகொ
டம்பிரானுமடியருமல்லது
பேயும்பூதமுந்தேவருமற்றும்
பிறக்கும்யாரும்புகுதப்பெறார்களே. (௨)



வேறு.

வெந்துதாபதர்கடாயுதரவெந்தீயினால்
வந்துதாபமறுநீழலவண்மந்தாரமே. (௩)

மெய்ம்மையேபெறவிரும்பியடிமேவில்விளையத்
தம்மையேபெறவழங்குமவள்சந்தானமே. (௪)

பாரிசாதமுடனும்பர்பலமுந்தருதலாற்
பாரிசாதமெனவும்பர்முனிவோர்பகர்வரே. (௫)

ஏமநல்குறவிரந்தவர்களெல்லையில்பரந்
தாமநல்குமரிசந்தனமெனச்சொறருவே. (௬)

கற்பகந்தருவதக்கலைகடந்தபொருளே.
கற்பகந்தருவதக்கலைகடந்தபொருளே. (௭)

வேறு,

பிறிவழியின்றியுருகியநெஞ்சு
பெருகியவின்பவுருவையே
பொறிவழியின்றிமலர்வனதின்று
புலனெனுமைந்துதருவுமே. (௮)

மலர்தருபஞ்சதருமதுவின்ப
மறிகடலென்றமறையெலா
மலரவனந்தன்மகனரனின்ப
மதிலொருவிந்துவளர்வதே. (௯)

வேறு.

யாதுநாசமுறவழிவொன்றிலா
வின்பமாய்விளைந்தென்றுந்தருணமயு

யோதுநாளுமறையின்கொழுந்தின்மே
லுள்ளஞானக்கொழுந்தொன்றுமோங்குமே. (௰)

முடிவிலாப்பெரும்பாழாஞ்சராசர
முற்றுந்தியவுமற்றெனையாள்வகை
வடிவிலான்வடிவாகிவருந்திரு
மாதுபார்க்குங்கழுநீர்மலருமே. (௰௧)

வேறு,

பத்தியாங்கடற்றோன்றுமோர்
பாவைமுன்றிலிற்சங்கநன்
முத்தியாம்பெறவழங்குமே
முன்னைநான்மறைமுழங்குமே. (௰௨)

மொழியினல்லப்பரிதெனு
முளரிநல்குமுத்தேவரு
மழியுநாளினுமழிவிலா
வளவிலாதமர்நிதியையே. (௰௩)

வேறு,

தொந்தமிலாவுளமென்றுமொழிந்தன
சுருதிகள்சொல்லளவா
வந்தமிலாதவகண்டனுடம்மை
யமர்ந்திடுமாலயமே. (௰௪)

விடலிலமேவரும்வேதவிழுப்பொரு
ளெனவிடலில்லடியா
ருடலிலமேயெனவோதினன்வாதநல்
லாரணுவப்பிடனே. (௰௫)



வேறு,

அண்டமெலாந்தன்னுடையவகத்தடக்குந்திருமேனி
யம்மைக்கேற்க
வுண்டெனலாவதுகோயிலன்பருளமல்லதுவே
றுலகத்துண்டோ. (௰௬)

செழுந்தரளவடமன்றியகிலாண்டவடமணியுந்
திருவேயம்மா
தெழுந்தருளுந்திருவாசலிருசெவியாமடியவரோ
பெரியார்யாரோ. (௰௭)

என்றுமதியெரியலகைக்கிடும்விளக்காமன்னைதனக்
கெல்லாருள்ளு
மொன்றுமதியாந்தன்னையொழியவவியாதவிளக்
குலகத்துண்டோ. (௰௮) ஆ. அச.

தேவி.

தாயினும்வந்தெனையாண்டதம்பிரான்மலர்ப்பாதந்
தரித்தோருள்ளக்
கோயிலுவந்தருளியுறைகோமளத்தின்றிருமேனி
கூறலுற்றும். (௧)

வேறு.

முதியலோகமீரேழின்முளரிவாழுமூதாதை
முதல்பிபீலிகாதேகமுடிவதாகமேல்கீழ்செய்
மதியும்வாழ்வும்வாணாளும்வலியும்வேறுவேறாகி
வருமநேகமாகோடிவடிவிலேகமாயோளே (௨)

நகிலுமாதர்வேல்போலும்விழியும்வாணிலாவிசு
நகையுமோவிடாதோதிநரகினுளும்வீழ்வேனை
யகிலமாதரார்கேதமகலவாளவோர்மேனி
யகிலநாதர்தாமேவவருளுகாதல்கூர்வாளே. (௩)

நயனநீரொடோவாதுநதிசெய்நாதர்சீர்பாத
நளினகீதநாவாரநவிலுவார்கடாமார
வயனுமாலுமேருளுமவனுநாளுமாராயு
மழிவிலாதவோர்போதவமிர்தபானமீவாளே. (௪)

நிலனில்வானில்வாழ்வோர்நிலையிலாமைதானுடி
நிகரில்வீடுசேர்போதநெறிகள்போலவேகூறு
சலனவாதில்வீழாதுதலமையலாதுதேடாது
சமதமாதிசேர்வார்கடலையின்மேவுதாளாளே. (௫)

வேறு,

அடியவராளவறுபிறவியச்சம
தறவருளியபதமறியுமித்தனை
முடியறிவுறமுயல்பணிபவர்க்கிலை
மொழிமுடிவெனமறைமுடிவுரைக்குமே (௬)

அலர்மணமுனைபொருண்மணியதிற்பிரபை
யவையிவர்நிகரெனமிகவுரைப்பதோர்
கலவிசெய்தொருவடிவுறமதற்செறு
கடவுளைமருவியகனதனத்தளே. (௭)

அருவெனவுருவெனநிகழனைத்துமோ
ரணுவெனவவளொருதிருவுருக்கொளு



முருவினையணுவினினணுவெனக்கொளு
முணர்வரிதவள்செபுமொருநடத்தையே. (௮)

வேறு.

நிகழுமுலகினிலகிலவுயிர்விழியுநிகழவொளியே
திகழுமெரிமதியிரவிநிகழுமொளிதிருநயனமே. (௯)

கவியுமிகுககனவொலியுலகினுயிர்கருதும்வகையே
செவியினுறுதிசைகளையுமுதவுமவள்செவிமலர்களே.

நவமணியுமிறைவிதிருவுருவினொளியுடனவில்லா
முவமமலவுலகினுயிருணர்வுணருமொளியவொளியே.

கருமுதலைகவரவொருகரியதுயிர்கழிபொழுதிலே
யொருமுதலைநினையவிருள்கிழியவருமொளிதிகிரியே.

கருமிடைசெய்பலகரணவவுணர் நிசிசரர்கணமெலா
முருமிடியினரவினமுமறமுழவுமொலியணிலமே. ( )

வேறு.

கறுக்குநிசிசரன்செவிவாய்முதலஞானகரு
மங்களெனவே [வி
யொறுக்குமொருபதுசிரமுமுருளவொருகணையிறை
தனுவுதவுமே. (௰௪)

வேறு.

ஊனவடிவாளவுணரிகோடிபடைசாயவொழி
யாதொவிருமெய்ஞ்
ஞானவடிவாடனதுஞானவடிவாண்மிகு
நலன்பெருகியே. (௰௫)

முத்தண்டுமொருதண்டுமலவெய்யவிறன்மோக
னெனுமந்தக
னுத்தண்டமொழிவிப்பதுணர்வின்பவுருவான
வொருதண்டுமே. (௧௬)

வேறு.

ஒழிவிதுலகெனுமுருவினிறையவ
னூரகவணைமிசையணைவதே
யழிவிலறிவெனுமுருவினலமிகு
மடியரகமலரமளியே. (௧௭)

எந்தவளவறுமண்டமணுவென
வண்டமெனவணுவிசையுமா
றந்தவளவமைகின்றதடியவ
ரம்பொனகமலரமளியே (௧௮)

அயர்வுறினவறுமகமென்மலரினி
லகிலபுவனமுமில்லையே
யுயிருநிகழ்விலைபரமுநிகழ்விலை
யிறைவியுணர்வொளியுள்ளதே (௧௯)

வேறு.

அடிசூடுவாரடியா
ரமரர்முடியவர்கோவின்
முடிசூடப்பெறுவதுவோ
பெறிற்பெறுவார்மூவருமே. (௨௰)

மொழியின்மொழிமொழிவனருண்
முதல்வியடியாரொழியப்



பழியின்மறையறியுமோ
யதம்பணிந்துபாடவே. (௨௧)

வேறு,

நாரணனேமுதலாகநவைதீரவுலகங்காப்
பவரைக்காக்குஞ்
சீரணங்கின்பதமொருகாற்பிரியாநல்லன்பர்களே
திருமெய்க்காவல். (௨௨)

ஒன்பதுதீர்த்தமுமன்பர்தம்பாதம்விளக்கியநீர்க்
கொவ்வாதென்றே
யன்பர்கடங்கண்ணீர்கொண்டம்மைக்குமஞ்சனநீ
ராட்டுவார்கள். (௨௩)

வேறு.

யாப்புச்செய்யவலங்கலுமாடையு
மெனதுநெஞ்சுசெஞ்சாந்தமிருகரங்
கூப்புச்செய்கையணியென்றுகூறினன்
குருகையாளிமற்றூர்வல்லர்கூறவே. (௨௪)

புகலுமாறரிதாகியபூவைக்குப்
பூதபௌதிகமாகிப்பொலிந்திடு
மகிலமாவிடமிவையன்றியே
யண்டருண்ணுமமுதோவமுதமே. (௨௫) ஆ௱௯.

---

ஆல்.

சிவனிடங்கொடிருமாதமர்ந்தருளு
தெய்வவாலமுளதென்றுமுன்

ஞுபதிடங்கள்பலவோதும்யானும
துரைக்கலாமளவுரைப்பனே. (க)

வேறு.

ஆனமுதலின்கணேயடையவாதியிறை பண்படைநாலு
மறை,யாயவரிதென்றவிட்டுவிளையாடியருள்கின்றவோ
ர்மொழியில், வானமுதலைந்துபூதமியமானனிகழ்சந்
த்ரசூரியரு, மாயவருமன்றுமோதுமொருவாதையற
நின்றுநீடியது. (உ)

ஆயபலவும்பர்வானமிடையானநிலனம்பராசிமலை
யாழுமுறநின்றபாதலனுமாக விவையைந்தி னேமும
லவ,மேயபலவும்பராதியென வேறுபடவந்தயோனி
களு,மேவுசகதண்டகோடிபலவிழவெழநின்றசாலை
[ய து. (ங)

நாலுமறையங்கமாறுசிவஞானன்விரிஞ்சனுமகில
நாயகர்விளம்புமாகமமுநாடுபதினெண்புராணமிறை
கோலமறைகின்றகிதையிதிகாசமுடனன்பராவிகளி
கூரமொழிசெஞ்சொன்மாலைபல கூறுகிளிதங்குகூடு
[ள து. (ச)

ஒருவமையன்றிமேவுபரலோகமுறைகின்றவிட்டுமிறை
யோனையெதிர்கண்டுவாழவருமோரளவிலின்பவிட்டும
னேருவமையென்றவீட்டுமொரு வ]
நீர்மையுறவொன்றும்விட்டுமிவை
நீடுபெறவெம்பிரானருளநேயமொடிருந்தநீழலது()

வாறுமிறைவன்சதாசிவனு
மீசனுமியங்குமாருதமும்



வாளெரியுமும்பனுமானும்
வார்புனலும்வெங்கனுகணையி
னுனுநிலனும்பிதாமகனு
மாகவருமைந்துபூதமிவ
ராயதனுவின்ப்ரமாணமினி
யாலினளவென்கொலோதுவதே. (சு)

வேறு.

சொன்னவாவினின்னலுச லெல்லைசொல்லவில்லையா
மன்னவாகனத்தவொல்லை சொல்லவாகினுருமே. (எ)

ஆ:ாயசு.

---

வேறுபலிபீடம்.

அண்டபலகோடிகளா லாரணபண்டிதரமைத்த
பிண்டபலியிடும்பெரிய பீடிகையார்பேசுவார். (க)
எத்தாநின்றிடுநாவோ டிணையடிவீழத்தலைகள்
கூத்தாடவுடலமுயிர் பலிகொடுப்பார்கோடியே (உ)

வேறு,

தம்பிறவிவேரொடுநறிக்குமிறைதேவியிரு
தாடலைகடாங்
கும்பிடலொழிந்துபயனின்றிவிளையாடுவ
குறைத்தலைகளே. (ங)

வாளெரியினிட்டபசுவாவிமகிழ்வுற்றிறைவி
வானலகைகைக்கொளுமதே
யாளதலனுற்றறிஞர்ஞானவெரியிட்டபசு
வாவியிவள்கைக்கொளுமதே. (ச)

நிலாவருமுகத்தினினிலாவியவிழிக்கடை
நிலாதுயிரறப்பருகியே
யுலாவரவரத்தனியுலாவருவர்மெத்தென
வியோகினிகள்சிற்சிலவரே. (௫)

வேறு.

மருங்கிலாவகைவளர்ந்ததனங்கொண்டுவையமுயி
ரொருங்கெலாமொருங்குண்வகையோகினிகளுலாவுவ
[ரே. (௬)

அப்பொழுதைக்கப்பொழுதுமதிசயமாமதுவே
கொண், டெப்பொழுதுமதிசயமாயிருப்பரிடாகினி
களே. (௭)

வேறு.

இருணகைக்கிளைகொடுத்தெழிலுருக்கொடுசகத்
திருணகைக்கிடனறுத்தொளிர்வர்யோகினிகளே (௮)
பகலுமத்தமுமறப்பரமதத்துவமுறச்
சகலவத்துவுமெடுத்தயில்வர்சாதகர்களே, (௯)

வேறு,

அகிலமுமறவிழிந்ததாளுடையா
ரளவறிவாலுயர்ந்தநீண்முடியார்
பகலிருளறநிறஞ்செய்மேனியினர்
பலிகொளவுலவுமந்த்ரபைரவரே, (௰)

அணிமுடியளவிறந்துமேவினரா
லணிமலர்பெரிதுவந்துசூடுவர்நீள்
பணிமுடிதரவிழிந்ததாளவர்சேர்
பரிசுறவருள்வர்மந்த்ரபைரவரே. (௰௧)



கரியினுநிறனிருண்டபேய்தொழவே
கருணையிலிரவியித்துதாரகைவா
ளெரியொளிகெடவிலங்குபேரொளியா
யிலகுறவருள்வர்மந்த்ரபைரவரே. (௰௨)

கலகலெனநனிசிறந்தபைரவர்நீள்
கலைகளினொலியடங்கவீவகைபூ
தலகலிகெடவியைந்தகீதமொடே
தமருகவிசைவழங்கியாடுவரே. (௰௩)

பழகியவுடலமிந்த்ரியாதியினோர்
பணியறமதிவழங்குநாதர்கள்பே
ரழகியகருணைகண்டுநீள்விழியா
லருவிகள்விடுவர்நின்றுசாதகர்களே. (௰௪)

வேறு.

அகிலசகமறையும்வகையளவில்சுகமதுநிறைய
வமுதுசெய்துதாம்
பகலிரவுதெரிவதறவிலகுமுருவுடையர்சில
பைரவர்களே. (௰௫)

எம்மையருள்செய்கெனவிரந்தவவர்கட்கினிய
பைரவர்கடாந்
தம்மையருள்செய்குதலினெப்பர்தமையாளுடைய
தத்துவனையே. (௰௬)

எதுமயிடன்றலைதுணித்தியமன்வென்றசிவ
யோகினிகண்முன்

சிறுமயிடன்றலை துணித்ததொருதெய்வமயி
லிற்றிகழ்வரோ. (௰௭)

வேறு.

சாலவரிதென்றுநாலுமறை யாயிரமுகங்களானவுயர்
சாகைபலகொண்டுதேடநனி தாரணியுள்வந்துதான்
மனிதர், போலவெளிவந்தநாதனிருபாதமுடிகொண்
டுபூமியிடர், போகவென நின்றிடாகினிகள்போதம
துவுண்டுபாடுவரோ, (௰௮)

ஞாலவமுதுண்டுவேகபுலநாகநடநின்றுகால்வளைய
நாடிமனவன்கண்மேவுமுயிர்நாசமுறுமந்தசாரமதி
யாலமமுதுண்டுநாடரியவாதியிறையண்டைநீதியிவை
யாகுமெனவன்பர்காணவிளையாடுவர்கணங்களுயகரோ

அ கரு௫.

---

பேய்.

போதமாம்வடிவுள்ளவாறனு போகமாகுதலின்றியே
பேதமாகியவாதமேபகர்பேய்களைச்சிலபேசுவாம்()

வேறு.

நீதிசணபங்கமேநிலையானவுயிரும்பன்வானிலை, நீரினை
தொழுங்குபோன்மறி நேரறவியம்புவிட்டிறை, போ
திநிழலின்கணேறியபோதநெறியென்றுவாதிகள்,போ
ரின்மிகவென்றசிவரபோர்வையுணைகின்றபேய்சில,()

எதமுளதின்றநேகம தேகநிலைநின்றிடாதுட,லேதனை
ளவின்பவீடுலகேழின்முடிவென்றமொழிகள், பேசும

ருகன்றனுனெறிபேணியுடையின்றிநாடவர், பேயெ
னவியம்பவோர்துடைபீலிகொடுநின்றபேய்சில. ()

நாடுபரனன்றிதீவினைநாகநிரயங்களாருயிர், நாசபவ
பந்தவீடெனுஞானமவமென்றுமாய்வழி,தேடுபொ
ருள்கொண்டுநாரியர்சிறடிபொருந்தவீடிது, தேவர்
குருவின்றன்வாய்மொழிதேறுமெனநின்றபேய்சில.

நாதனறிவென்றுமாமறை நாலின்முடிவெங்குமோதி
ய, ஞானநெறிகண்டும்வீடுற நாளுநினைவின்றிநீள்வி
னை, வேதநெறியென்றுமீள்வறவீடுபிறிதின்றிவானக
மேவுமிதுவென்றுநாடொறும்வேள்விசெயநின்றபே
ய்சில. (௫)

ஆனிவுடலிந்திரியாதிகளாமெனபுத்திமானத, மாருயிர்
கள்பந்தவீடுகளாதியிறையென்றபோதமும், வானமு
தலைந்துபூதமுமாகர்முதல்வந்தயோனியும், வாமும
யனண்டகூடமுமாயையெனநின்றபேய்சில. (௬)

ஆழிவளைகண்டதேகுறியாகவிழிகின்றசாதிக,ளானும
வருண்டசேடமதார்வமுட னுண்டும்வேறில, னூழியு
லகுண்டகோன்முழுதாகுமெனுமின்பமார்குரு, கூர
ன்மொழிகண்டும்வேறற வோதிமயல்கொண்டபேய்
சில. (௭)

நாதனருள்சண்டையான்மறை ஞானமுனிபண்டுபா
டிய, நாலுமறையந்தநீதியைநாடிநெருகிஞ்சின்மா
ணிகழ், பேதமதுகண்டபோதமிபிரீதியெனநின்றதா

மொரு, பேறுமிழவுங்கொளாமிகு பேதமறைகின்ற
பேய்சில. (௮)

ஆதிமறையந்தநீதியையாயவறிகின்றபோன்முன, மா
யவறிவின்மையால்வருமாகதிசைநின்றனேகமு, மோ
துபரனென்றுவிட்டு மியோகதிசையின்கணேகமு
மோதிமறையெங்கள்பாலவிரோதமெனநின்றபேய்
சில, (௯)

ஆழியுலகங்கள்விடுறவாரணம்விளங்கவோதிய, வாதியி
றைசந்த்ரமௌலியையாடலதுகண்டகோமளம், வா
ழிசகதண்டநாயகி வாழியெனவின்பமாமகிழ், வாச
நறவுண்டுதாமதிமாறிவிழுகின்றபேய்சில. (௰)

மேலிரவியிந்துசேய்புதன்வியாழன்வெளிமந்தனீரறு
மேடமுதல்வந்தராசியைவேறுபடலின்றிநாளெழு, நா
லில்வருகின்றவாறுகளுசநிகழ்சித்தனுதிக, ளுடியறை
கின்றசோதிடநாளுமறைகின்றபேய்சில. (௰௧)

வேறு.

முனிக்கணமெலாமனிதர்பந்தமுறவீடுபெற
மூலமிதுவென்றுபகரு
மனக்கடவுளானசெழுமதியொழியவேறுபர
வத்துவிலதென்றசிலபேய். (௰௨)

விண்ணவனியாவையும்விளங்குவதுமற்றவ
னெழுத்தருளின்மேவுமுயிரின்
கண்ணவனலாதுபிறிதில்லைகதிரோனலது
கடவுளிலதென்றசிலபேய். (௰௩)



மாலயனுருத்திரன்மகேசுரர்சதாசிவரு
மற்றுமுளதேவருமெலாங்
காலவசராயழிதலாலழிவிலாமலுள
காலமிறையென்றசிலபேய். (௰௪)

யாவருலகத்துவினைவெல்லவுரியாரமரர்
யாவருமிறைஞ்சுமொருமுத்
தேவருமொழிந்திலர்கள்செய்தவினையன்றியொரு
தெய்வமிலதென்றசிலபேய். (௰௫)

அத்தரமியங்குனரும்வருவரரியாளியர
வாதிகளுமஞ்சுமுலக
மந்திரவசத்திறைவனென்பதுவுமற்றதனை
யென்றுமயலுற்றசிலபேய். (௰௬)

முத்திதரவோதுமிருமுச்சமயநூலுமறை
நான்முழுவதுந்தருவதாஞ்
சத்திதருமந்திரமுமெய்ப்பொருளுமாகுவது
சத்தமெனநின்றசிலபேய். (௰௭)

வேறு.

வழுத்தித்தற்பசியாற்கவிபாடுனர்
வழுச்சொற்சொற்றறியாத்தனமோதுதற்
கெழுத்துச்சொற்பொருளியாப்பலங்காரமென்
றிவற்றைக்கற்றிறுமாப்புறும்பேய்சில. (௰௮)

படித்துப்பற்பலநூல்களுந்தாமுறு
பசிக்குக்குத்திரராயிரந்தார்கைகயிற்

பிடித்துப்பிச்சையிடாரகம்போயவை
பிதற்றிப்பக்கமுணுவரும்பேய்சில. (௰௯)

வேறு.

ஊழைக்கழியச்சிலகாலமிருந்
தின்னக்கருதற்றுடலத்துளவங்
கூழைக்குமிழிட்டுமுகந்ததனைக்
கும்பித்துவிடுஞ்சிலகூளிகளே. (௨௰)

கடவாளரிகோமுகம்விரமலர்க்
கமலம்மயில்பத்திரசோத்திககுக்
குடவாதனமென்றிருகைகொய்கால்
கோணிப்பழகுஞ்சிலகூளிகளே. (௨௧)

தீதாமலனென்றுணராதுடலைச்
சேமிப்பவைதானதினுவலசிக்
கோதாமலனும்மெனநல்லறிவோர்
கூறத்திரியுஞ்சிலகூளிகளே. (௨௨)

மூலத்திகழங்கியுருக்கவிழு
மூடிசேரமிர்தத்துளிமுத்தொருசெங்
கோலந்திகழ்தத்துவினுற்றதெனக்
கோள்கொண்டயருஞ்சிலகூளிகளே. (௨௩)

தோயத்துலவச்சுடுவெங்கனலிற்
றோயச்சுரர்சாதிகள்போகியவா
காயத்திலவக்காயத்தைவிடக்
காயத்திலுறக்கற்குஞ்சிலபேய். (௨௪)



ஆடம்பரமாமறுமைத்துணையா
மாரனைத்தமகத்தொழியப்புறனே
வேடம்பலகொண்டுநடித்துழலும்
வேதாளகணங்கள்விதம்பலவே. (௨௫)

வேறு.

கடியவாயவினைபல்கதற்றுவ
கொடியவாயனகொள்ளிவாய்ப்பேய்களே. (௨௬)

ஆ ௱௬௧.



தொழில்.

ஏதுகோடியளவென்றிப்பேய்களுக்
கோதுவோமிவற்றின்செயலோதுவாம். (௧)

வேறு.

அமையக்கற்பதுவிட்டுச்சிலதர்க்கித்தமையாச்
சமையக்கத்ததுகத்தித்தலைமுட்டிக்கொளுமே. (௨)

பொருதர்க்கப்பரபட்சச்சமயத்தைப்பொரவே
விருதிட்டுப்பொருதிட்டுத்தனைமெச்சிக்கொளுமே()

சயமுற்றுப்பொருண்முற்றுத்தமிழிட்டுச்சொலவா
ரியமிட்டுச்சொலவொட்டொட்டெனவட்டித்திடுமே.

சொனவத்தந்தினைமுட்டத் தொடரக்கெட்டினையான்
வினவத்தட்டிலதர்க்கத்தெனவெட்கிச்சொலுமே(௫)

உனதர்க்கப்பொருள்பத்தெட்டுளதட்டிப்படியே
யெனதர்க்கப்பொருளிற்றட்டிலமுத்திக்கெனுமே.()

பரிசுத்தப்பொருளெற்றத் துவநித்தத்துவமே
துரிசுற்றுக்கெடுமித்தைத் துணிசித்தத்தெனுமே. (எ)

தலையிற்சொற்கடை யிற்சொற்பொருளொக் கத்தழு
வா, மலைபச்சொற்கெடவத்தத்தினசொற்கட்டிடுமே.

அணிவுற்றத்துவிதத்தைத் துவிதத்தைச்சொலவே
பணிவுற்றுத்தணிவற்றிப்படி துக்கப்படுமே, (௯)

குருதர்க்கத்தினில்வெற்றிக் கொடியிட்டுக்கொளுமே
யொருதர்க்கக்கழுதைச்சொற்றெரு தர்க்கத்தழுதே.

தெரிசித்துப்பரிசுத்தப்பொருள்சித்தத்துதவா
தெரிசித்தத்தொடுதர்க்கித்திடுமற்றிப்படியே. (௰௧)

வேறு,

அறவுரைகளவையெனவுமிவையெனவுமலகையுட
னலகையிகலிச்
செறவுரைசெய்பலகலையினெறியினுயர்ககனமுடி
செவிடுபடுமே. (௰௨) ஆ ௭௩.

---

உவமை.

கன்றினவுளத்தொடுகளத்தினினரம்புகள்
பரம்பவமையா
தொன்றினுரையொன்றுரைசெயா தகலையோதலகை
யொப்புரைசெய்வாம். (௧)

வேறு.

தன்னலத்தபரஞானநிற்கவினை
நல்லறப்பயனைநச்சுபேய்



கன்னலைக்கழியவிட்டதற்றகழி
கோதுகொள்பவர்கடுக்குமே. (௨)

உட்கிடந்தமலனெழிவுறுதுபுனல்
கொண்டுடம்புகழுவுற்றபேய்
மட்குடந்தனின்மலத்தைவைத்தது
புறத்துடைப்பவனைமானுமே. (௩)

அறங்கொணெஞ்சொழியவலகையன்பினொடு
கட்டுகின்றவழகார்மடம்
புறங்கொள்செஞ்சடையகங்கொள்காமவெரி
போதருந்தகைமைபோலுமே. (௪)

தன்னினுணறியநின்றமானமவை
கொண்டுதன்னதுருநாடுபே
யுன்னினுவமைபாதவங்கொடெரி
பாவகற்சுடுதலொக்குமே. (௫)

துதித்தலென்குருவும்யாமுமோரதிவ
தாகுமென்றுவினைசூழவே
மதித்தபேயுதவுநன்றிகொன்றவன
வற்றபாதகனைமானுமே, (௬)

கள்ளையுண்டுமுன்புள்ளபோதமு
மிழந்திடுங்கழுதுகையின்முன்
புள்ளதுங்கெடவவாவினுலிரத
வாதமூதுமவனொக்குமே. (எ)

அருந்தலும்புணர்வுமாதரித்தழலு
மலகைவலையரிடுகண்ணியிற்
பருந்தின்வாயரவின்மண்டுகங்கொள்சிறு
பறவைநுகர்நறவையொக்குமே. (அ)

பந்தமுத்திபெறவொருவரின்றிவரு
பவமறுக்கமுயல்வுற்றபேய்
வந்தைபெற்றமகனுற்றநோய்விட
மருந்துசெய்பவளாமானுமே. (கு)

ஒன்றுபல்பொருளநித்தநித்தமு
முள்ளதில்லதுருவருவமா
மென்றுசொல்லலகைதெளிவுவல்லிருளி
னிருளையிட்டதிஃதொக்குமே. (ல)

வேறு.

போதமாயகண்டமானபொருளதொன்றையெண்ணி
ல்பல், பேதமாக்கு மலகையெண்ணில் பிரமகாதர்
போலுமே. (லக)

தன்னெழிந்துவேறெனச் சகத்தைநாடவுற்றபேய்
பொன்னெழிந்துபூண்விரும்பு போதகனேர்போலு
மே. (லஉ)

எதிர்நிகழ்ந்ததுண்டலாத தில்லையென்றியம்புபேய்
கதிரையில்லையென்றியம்புகண்ணிலாளனொக்குமே.()

இடும்பையோடுசுற்றமுற்ற வின்னதீர்க்கநின்றபேய்
குடும்பிகோபுரஞ்சுமந்தகூனுபாவைமானுமே.(லச)



வேறு.

இக்களேபரநிற்கவியற்றுபேய்
மொக்குள்பூண்கட்டுழெர்க்கனையொக்குமே. (லரு)

வேறு.

அகலிடத்துளதீங்கெலாமவற்றினுக்கணுவாம் [ரே.
புகல்வதென்சொல்பேய்க்கழகுபொல்லாமையேயன்

பேதமன்னுபூதங்களின்பெருமையார்சொல்லும்
பூகமைந்தையும்பெற்றதுமவற்றினேர்பூதம். (லசு)

ஓதவெல்லையுண்டாதலினுய்த்திலவலகை
போதமெல்லையிலாமையின்மெலிந்தனபூதம். (லஅ)

ஆ ா கூக.



விச்சை.

எக்கணங்களுமெத்துதியுங்கொடு
தொக்கணங்கினைச்சூழ்ந்தடிபோற்றவே. (க)

உம்பராதியராமும்பர்கைதொழ
வெம்பிராட்டியிருந்தருளெல்லையில். (உ)

விச்சையாவையுங்கற்றவிச்சாதர
னிச்சையாம்பரவிச்சையைநெஞ்சிலே. (ரு)

ஆயகாலமிதுவெனவந்தொரு
பேயைவாவென்றுபேய்த்தனம்போக்கவே. (ச)

வேறு.

ஆணுடன்பெணலியாபுடப்புக
ளநத்நமாயதனிலொன்றினென்

சாணுடம்பினளவாவிருந்ததின்
றன்மைபாரதனினன்மைபார். (௫)

மடக்குமாறுமிகும்வானவர்க்குமரி
தாயறக்கடியவாயுவித்
தடக்குமாமனனடங்கல்பாரஃ
தடங்கிநின்றதொருகருமைபார், (௬)

புக்கபூமிதெரியாதவாறுமுன்
னின்கணின்றபுரையொன்றிலா
மிக்கபேரிருளொளிக்கஞானதல்
விளக்குவந்துகண்விழித்தல்பார். (௭)

விழித்தியாவையும்விழித்திமைத்துல
கமைத்தளித்தகிலமீளவு
மழித்துமூவர்களுமாகிநின்றவது
வாதல்பாரதுவலாமைபார். (௮)

இட்டதீபமுமிலங்குமெய்ப்பொருளு
மெண்ணும்யானவைகளுமின்றியே
விட்டதியெனவிளங்குமாறுமற
விட்டிருந்தவொருவிரகுபார். (௯)

களித்தயாவையுமிறந்ததென்றது
மிறந்ததோர்கரியகங்குல்போ
யொளிக்கயாவையுமுணர்ந்துநின்றபர
மானவொண்கதிருதித்தல்பார். (௰)



எண்ணவாருமிசையாதவண்டசத
கோடியுந்தராமுனேதவாம்
விண்ணையாதிவருபூதமைந்தினையும்
விழியினுனதுவிழுங்கல்பார். (௰௧)

காட்சியாவுமொருகண்ணதானபடி
பார்கவின்பெறவிருந்ததோர்
மாட்சிபார்வசனமானகோசர
மலர்க்கையுற்றமணியாதல்பார். (௰௨)

மறப்புமின்றியோர்நினைப்புமின்றிமலர்
வதுவுமின்றிமலர்வற்றதோ
ரிறப்புமின்றிநிகழின்றியிப்பொரு
ளிருத்தல்பாரெனவியம்பியே. (௰௩)

அலகையாயுழலுமென்னையேயுள
வனந்தவின்பவறிவாக்கினு
புலகையார்தமிலொருத்தனுமென
வுனக்கருத்திநினைப்பதே. (௰௪)

முன்னையானெனதுகண்டிலேன்மொழி
யிறந்தவின்பவறிவாயினே
னென்னையானினிவியப்புமாறென
விறைஞ்சிநின்றவளையேத்தியே. (௰௫)

இந்தவிச்சையுலகத்திலியாருள
ரெனக்குநின்றிருவுளத்தினால்

வந்தவிச்சையெனவவனுநாயகி
மலர்ப்பதங்களில்வணங்கவே. (௰௬)

அன்னையாதரவினோடவன்றலையி
னம்புயப்பதமளித்துவந்
தென்னையாளிபரவிச்சைவல்லவனை
யாவரும்பணிமினென்னவே. (௰௭) ஆ உ௱அ.

---

பேயிரங்கல்,

விச்சைகண்டவர்கடொழுகைகண்டில
மிகப்பசித்துவிழிசுழலுவேம்
பிச்சைகொண்டுணவுமிடுகிலார்களிவை
பேய்களென்றிகழ்வுபேசியே. (௧)

அண்ணலாரடியர்கொண்டதல்லவற
வேடமாகுமவைகொண்டியா
முண்ணலாமெனநினைந்துகொண்டன
மறிந்துகொண்டதிவ்வுலகமே. (௨)

எந்நிலங்களும்வளைந்தவேழ்கடலு
மெப்பொருப்புமுளயாவையுந்
தின்னினும்பருகினுங்கெடாதுபசி
யென்னருந்தியிதுதீருமே. (௩)

வேறு.

தாகமோகாதியெலாந்தணிக்குமொருதனிமருந்தின்
மேகமாமுணர்வென்பனொங்கள்கணிழ்காண்கிலமே, ()



அந்தவொருமருந்தினைப்பெற்றநந்தமாயிரத்தொரு
வருய்ந்தவருண்டிலையென்னவோதுவதும்வேதமே.

மகனுராப்பெற்றமறைவல்லவரும்பற்றிலார்
சுகனார்பெற்றனரென்றுசொல்லுவதும்வேதமே. (௬)

அப்படியேயரியபொருள்பெறுமவராரலகைகளா
யிப்படியேயிப்படியிற்றிரிகின்றயாங்களியார். (௭)

கற்றெல்லையறப்பிதற்றிக் கண்குழித்துகடைகடொறு
ஞ்சற்றல்லயாம்பசித்துத்தமொறுந்தமொற்றம். (௮)

மழித்துநீட்டியும்பறித்தும்வற்கலைகள்பலபுனைந்து
மொழித்துங்கோட்டிகள்கொண்டதெத்தலையாமுண்
ணவே. (௯)

கருக்கெடுப்போமுங்களைநாங்கழல்சூட்டியென்று
போய்க், குருக்கெடுப்போமெனிற்கண்டு குதித்தோ
டிப்போவர்களே. (௰)

பேசிலோவல்லவாய்ப்பேயென்பர்பேசுதற்குக்
கூசிலோவூமனெனக் கொச்சையெனக்கூறுவரோ ()

துதிப்பாரைத்துதிப்பதுவுந்துதித்தாலுந்தம்மையவ
மதிப்பாரைமதிப்பதுவும் வயிறொருசாண்வளர்த்தற்
கே. (௰௨)

மிகையாகும்பகையிதனில்வேறுண்டோவுற்றவரும்
பகையாகப்பண்ணுவதும்பாழ்வயிறேயல்லவோ. ௰௬

இந்தவயிறொபெரியதேழ்கடலோபெரியதுதான்
வெந்தவயிற்றன்ளெரியோவேலையினில்வடவெரியோ

வந்தனைசெய்துனைவாழ்த்தவைத்தருளாய்வயிற்றினெ
ரிக், கித்தனந்தேடிச்சுழலப்பண்ணினைநீயெங்களையே

உடலெழுசாணுப்பண்ணி யொருசாணுமொழிப்ப
தற்குக், கடலுலகினுலகமெலாங் காண்பானைக்காண்கி
[லமே. (௰௬)

பிழைத்தக்காற்பொறுத்தருள்கைபெரியோய்நின்கட
னன்றோ, புழைத்தக்காலடியோங்களுனக்குறுதிபுரைத்
தருளே.
(௰௭) ஆ ௨௨௫.

வேறு-கனவு

எனவிளப்பெலாம்விளம்பியிரவுகண்டதொருகனு, ந
னவெனத்திகழ்ந்ததென்ன வொன்றுநின்றுநவிலுமே.

இமைத்ததோர்கணில்லையோவொ ரெல்லையற்றவல்லை
யிட், டமைத்தவோர்மகாந்தகாரநின்றியானமுங்கவே

விட்டிலங்குதீபமேற்றிசைக்கணேவிளங்கவோர்
மட்டலங்கன்மார்பினொருத்தன்வந்திருக்கவே, (௩)

எல்லையற்றவன்பதம்பணிந்தியானிறைஞ்சவே
தொல்லையற்றவன்பனென்னையாளவென்றுசொல்லவே

புலன்களிப்பவர்த்தசெய்ய பொற்பதங்களின்றியே
நலன்களிப்பதென்னையென்று நான்மிகக்களிக்கவே()

தேனுமிக்கபாலுமென்ன நின்றுதித்தியாவென்முன்
மோனமுத்திரைதன்னிலேயிருக்கவந்தமூர்த்தியே (௫)

மெய்யெனுநலத்தோடேவிழித்ததென்கணிப்பய
னையைநாடியருளுகென்ன; வறியவோதுமன்னையே()



அந்தகாரமோகனின்னையாளவந்திருந்தவ
னெந்தைகாரணன்ப்ரகாசஞானதீபமிட்டதே, (௮)

மோனமாயிருந்ததன்மை மொழியிறந்தவின்பமெய்
ஞ், ஞானமாயிருந்தவேறிலாததன்மைநாடவே. (௯)

மேற்றிசைக்கண்வானவர்க்கு மேலனுதலானுடன்
போற்றிசைக்குமன்பர்பாதமுற்றபுண்ணியத்தரே.()

கருத்திருடொணுதவெந்தை கண்ணிருடமண்ணின்
மே, லொருத்தனுகிவந்தளிக்கு மென்றுவேதமோது
மே. (௰௧)

வேறு,

மரணமும்பிறப்புமறுமாமணி
கரணமெல்லாங்கடந்தகடவுளே. (௰௨)

வினவிவந்துநீவேண்டியதேதருங்
கனவுமுத்துருக்காரியமில்லையே. (௰௩)

என்னவன்னையிறைவிமறையெலாஞ்
சொன்னவன்பிறவானென்றுசொல்லுமே. (௰௪)

விண்முதற்பொருளெல்லாம்விளைப்பவன்
கண்முதற்புலன்காண்டற்கரியனே, (௰௫)

மூந்தைமூவர்க்குமூலமுனிவர்தஞ்
சிந்தையானுந்தெரிதற்கரியனே. (௰௬)

வரவுபோக்கற்றவான்பொருளென்றுமுன்
பரவுமாமறையெல்லாம்பகருமே, (௰௭)

முடிவுமாதியுமற்றமுழுமுதல்
வடிவமாகிவரும்படியெங்ஙனே, (௰அ)

சொல்லுகோலஞ்சுருதிவிருத்தமோ
வல்லவோவெனவன்னையருளுமே. (௰௯)

அருவனாகிலுமன்பர்க்குருவமாய்
வருவனென்றதுமாமறைகாணுமே. (௨௰)

பத்தியாம்வலையிற்படும்பார்மிசைப்
புத்தியாலறியொண்ணாப்புராணனே. (௨௧)

தேவியிப்படிகூறத்திருவருள்
பாவியேற்கிலதென்றுபதைக்கவே, (௨௨)

ஆ ௨௬௭.

---

சசிவன்னபோதம்,

அலகையச்சமறவகவான்கரு
மூலகின்முத்திபெறும்பரிசோதுவாம், (௧)

புணர்ந்தபாவமெலாம்பரிபூரண
முணர்ந்தஞானிவிழிபடவோடுமே, (௨)

வேறு,

எழிலாருஞானிபுகழென்னைகூற
அயர்விடிவன்சொல்வழிசெய்
தொழிலாளர்சேர்கையதுகேளுமுன்னை
யிதிசாசமொன்றுசொலவே, (௩)

தந்தாபமற்றபரனேவல்செய்த
வவனுற்றபேறுதனைமுன்



செந்தாமரைக்கண்முதல்வர் செம்மண
திருவாய்மலர்ந்ததிதுவே, (௪)

உவமிப்பின்ஞானிவிழிபட்டுமுன்னை
வினைவிட்டுமுத்தியுலகிற்
றவமற்றுவெய்யவினையேபுரிந்த
சசிவன்னனெய்துகதையே, (௫)

வேறு.

ஏமம்புகல்வாருளர்பாதகரா
மியாவர்க்குமிக்கவனாகுமிவ
னேமம்புகல்வார்குலமும்மெரிவாய்
நரகம்புகுமாறநடந்தனனே, (௬)

மலமேவியதீவினையின்வலியால்
மகிழும்பர்பதத்திலிருந்தவிவன்
குலமேவியதென்புலவாணர்களுங்
கொடிதாநரகங்குடியேறினரோ (௭)

மிகமேவியபுண்ணியபாவமெனும்
வினையின்பயன்மேலொருகான்முறு
திகமேவருமென்பதனுள்ளதோ
யெல்லாமிவனைச்செறவெய்தினவே, (அ)

தன்புத்திரனேயய்விடாமையிலாற்
றவறுற்றவிவற்பெறுதந்தையுளந்
தன்புற்றினியென்னைகொலோபுதல்வன்
றுயர்தீர்வகையென்றுசுழன்றனனே, (௯)

ஒன்றும்வினைத்துயர்துய்ப்பதலா
லொழிவிக்குமுபாயமுனக்கிலதே
யென்றுமறிந்தவனன்புவிடா
னிவனைக்கொடுமென்றனனெங்கணுமே, (௰)

ஒருமாதவன்மற்றிவன்வேதனைகண்
டொழிவற்றுளவொன்றையுளத்துணரும்
பரமாகியஞானிகள்கண்ணுறலே
பரமௌடதமென்றுபகர்ந்தனனே, (௰௧)

தானந்தமிலாததனைத்தருவான்
சத்தீச்சுரமென்னுமிடந்தனில்வாழ்
மானந்திபராயணனென்பவனின்
மைந்தற்குறுநோய்க்குமருந்தெனவே, (௰௨)

முடியாவுபதேசமிதென்றவனு
முனிவன்பதமெய்திமொழிந்தனனிக்
கொடியான்வெருவாதுகுயிற்றியநோய்
கூறற்கரிதாயகொடுந்தொழிலே, (௰௩)

இங்குன்திருமுன்பகரும்படியோ
ரிவனெய்தியதீவினையென்னவெலா
நீங்கும்படிதன்னனுபூதியினு
ளிகழும்விழிவைத்தனனின்மலனே, (௰௪)

கணியாதபவக்கடுவானதிருக்
கண்வைத்தலும்விட்டனகாதுகடும்
பிணியாவையுநல்லபிதாவிறைதாள்
பணிப்பணியென்றுபெயர்ந்தனனே, (௰௫)



இடனேமுதலாகவுவந்திறையோ
னேவும்பணிசெய்திவனுஞ்சிலநா
ளுடனேயிவனேதிருமேனிதனக்
குரியானெனவுற்றனனும்பனொடே. (௰௬)

நன்றுமுனிதாள்வழிபாடதனு
னாறுவிதமானபிறப்பினைவிட்
டொன்றாகியவீடுணருந்தவர்கட்
குபாசாதனநாலுமுதித்தனவே, (௰௭)

முனிவன்றிருமுன்புளதன்குறைதான்
மொழிவன்சிலவஞ்சலிகுஞ்சியதாய்ப்
பணிவந்திருகண்கள்பதங்களிலே
பலகால்வலம்வந்துபணிந்திடவே; (௰௮)

அருளேவடிவாகியமாமுனிதா
னறியாதவர்போலவழுங்கலுறும்
பொருளேதெனமைந்தனடுங்கினனிப்
பொல்லாதபவப்புணரிக்கெனவே, (௰௯)

வெருவும்பிறவிக்கடல்வித்தரமுன்
வேதாகமகீதைவிளம்புமதைக்
குருவுந்தனதன்பன்மனத்தளவிற்
கொளுமாறுதொகுத்திதுகூறிடுமே, (௨௰)

வேறு,

மரணபவங்களானபுனலையுடையது
மதியைவிழுங்குகாமவரவுபெரியது

கரணவொழுங்கருதவிடயவிளைநுகர்
கணமொடியங்குமீனமிகவுமுகள்வது. (௨௧)

பெருமிதமென்றகூறு,பெருமையுடையது
பிணிகளெனுங்கெடாதபுலவுகமழ்வது
வருமிடரின்பமானதிரைகள்பொருவது
மனமெனுமர்த்தராஜமகரமுறைவது. (௨௨)

அளவிலகந்தையாமையபரிமிதமுள
வவாவெனிறைந்தவாழமறியவரியது
களவுநெருங்குபாறுமலையுமுடையது
கலகவிடங்கமேவுகிருமிநெளிவது. (௨௩)

துகளெனுநன்கலாதநுரைகடருவது
துறவியினின்பமானகரையைவிடவகல்
மகளிரொனுந்தவாதவலியசுழியது
மறலியுமஞ்சுகோபவடவையெரிவது. (௨௪)

வெருவருகின்றபோகமுதலையடுவது
விவிதமனந்தமானதுறையுமறிபவ
ரொருவர்கடந்துபோகவிரகிலெழுபவ
வுததிவிளம்பயாவருலகினறிவரோ. (௨௫)

பொறிவழிசென்றமீளுமவலமதிகொடு
பொருசமயங்களாறுமுறியவிழுமதி
லறிவழிவொன்றிலாதபொருளதெனவுள
வனுபவவங்கமேறுமறிஞரகல்வரோ. (௨௬)



புணரிகடந்துபோகவிரகிலெனமொழி
பொழுதுபுலம்பியாவிபுதல்வனிறுமுன
முணர்வெனும்வங்கமேறுமறிஞரகல்வரொன்
றுரையைவழங்கிநாதனுவகையருளவே. (௨௭)

வேறு.

வாழியெனவிறைவனடிதொழுதவருபவமா
மாழியினையகலுமறிவருளுகெனவவரே. (௨௮)

பரவறிவுமபரவறிவெனவுமிருபரிசாந்
திரவறிவையறியுமவர்மொழிவர்தெளிவுநவே. (௨௯)

அபரவுணர்வருமறைகண்முதலகிலகலைபு
முபரமதையறவுதவுமுணர்வுபரவுணர்வே. (௩௰)

ஆகமவிதங்களறிவார்கள்பரமறியார்
யோகமொடுறங்குமவரோபரமுணர்ந்தோர். (௩௧)

புராணமிதிகாசமெவையும்பொருளனைத்தின்
பிராணனறியாதுளவிடத்திதுமிதற்றே. (௩௨)

இயலறிவதிசையறிவதினமறியவுளதா
மயலறிவதறிவதலவறிவறிவதறிவே. (௩௩)

நவிலுகலையறுபத்துநாலுமுணர்வாரும்
பவலயமதறுசுத்தபரமமறியாரே (௩௪)

ஆகவறிவாளரறிவாரவையனைத்து
மேகவறிவாளரிவையாவுமறியாரே. (௩௫)

ஐயறிவறிந்தவையடங்கினவரோனு
மெய்யறிவிலாதவர்கள்வீடதுபெறுரோ; (௩௬)

மெய்ம்மையறிவல்லதயில்வேறறிவதெல்லாந்
தம்மையறியும்மறிவதேயறிவுதானே, (௩௭)

பூசனையுமதுசகலபொருளுமறிதமையு
மீசனையும்வேறறவறிவதறிவெனவே. (௩௮)

தானெனுமுடம்பதுதனைத்தவிரவேறு
யானெனுமருத்தமுளதோவருளுமெனவே, (௩௯)

வேறு.

எனதாடைபொன்பூமகன்மையல்பாய்மா
விடங்கண்முகங்கால்கைமெய்யென்னவென்றுந்
தனதாயுரைப்பான்வகுத்திந்தவூனைத்
தானென்றயர்த்துஞ்சொலத்தக்கதன்றே (௪௰)

தாளாசவூராழிதனுவெந்நில்விணு
தண்டாகவகன்மார்புதட்டாகமொட்டா
நாளாமலர்ச்சென்னிகூந்தற்கொடித்தேர்
நாணுருமூர்வானில்வேருகநாடே, (௪௧)

கடக்குஞ்சரம்பண்ணியுண்ணின்றொருத்தன்
கைபாதகன்னங்கள்மெய்போலியக்குங்
கிடக்குந்நடத்தாவிடத்திவ்வுடம்புங்
கிடக்கும்மொருத்தன்னடத்தாவிடத்தே. (௪௨)

ஒருகூறுமலனுமொருகூறுடம்பா
மொருகூறுமனமாகுமுண்டற்றவன்ன
மிருகூறுநீயாகியொருகூறுநீயா
மிழிக்கும்மலஞ்சோரிடப்பட்டதுடலே; (௪௩)



ஊராதரத்துண்ணுமன்னஞ்சுடக்கை
கிட்டப்பொருதேயிருந்தார்கிடந்தார்
தாராதுறுப்பொன்றுமுயிர்போகவன்றே
தழற்பள்ளிமீதேதுயின்றார்சகித்தே. (௪௪)

நிழற்பாவைகண்ணாடியிற்பாவைகைகா
ணிமிர்க்கும்முடக்கும்மிவன்செய்புமெல்லாத்
தொழிற்பாலவாமற்றிவ்வுடலஞ்செய்தொழிலுஞ்
சுடர்ஞானவடிவானவன்செய்ததொழிலே, (௪௫)

அறிகின்றபொருளென்றுமறிவானில்வேறே
யானுமிவ்வுணரையானென்னலாமோ
செறிகின்றபுள்ளெல்லவேகூடிவ்வகையே,
செடமானவுடனின்னில்வேறென்றுதெளியே. (௪௬)

நிலனாகும்வற்பென்றனெகிழ்கின்றநீரா
நெருப்பாமிதிற்சுட்டதெல்லாமுமனிலஞ்
சலமானபுரையானவானிந்தவுடலஞ்
சடமானவைம்பூதவுருவங்கடாமே. (௪௭)

விழியைப்புமானென்னில்ரவியாதியாலே
யுருவத்தையல்லால்விளக்காமையாலே
மொழியப்படுங்கண்ணமுதனாலுமவனன்
றுருக்கண்டகண்டன்னையொப்பாகவுன்னே. (௪௮)

வேறு.

அழுதுண்பொருள்களினுண்பவைமுக்கூறதின்முக்கூ
றணியென்புநடுக்கூறதுமச்சைக்கிடனாகு

## மோகசமன்வாகை.

விடமன்னகாமன்முதலானசேனை
விறலார்விவேகர்படையாற்
படமன்னமோகன்மிகவேவெகுண்டு
படைகொண்டெழுந்துசெலவே. (௧)

இகன்மோகன்முன்னரிருண்மீதெழுந்த
ரவிபோல்விவேகனெழவே
பகலோனெதிர்ந்தபனிபோலிறந்து
படுமோகன்விட்டபடையே. (௨)

ஒருகோடியம்புவிடமோகன்மீள
வொருசண்டவாயுவுடனே
சருகோடுமென்னவெழிலார்விவேகர்
தனியம்புதள்ளிவிடுமே. (௩)

## வேறு.

மாளமாளவிவேகனெய்யமனத்தின்மந்த்ரவலினான்
மீளமீளவெழுந்துமோகன்விடாதபூசல்விளைக்கவே.

வீயுமோகினைவோருமல்விடஞ்செய்மோகன்விவேக
னால், மாயுமோவுயிர்மாயையாருமனத்தினுருமிருக்க
வே. (௪)

ஏகனாகியவீசனந்தமனப்பசாசறவெய்யிலே, மோ
கனாருயிர்மாயுமென்றனள் முன்னைநான்மறைமுடிவ
தே. (௫)



மோகனாருயிர்மாள்வதெந்தைமனப்பசாசைமுடிக்கி
லென், ஏகநாதர்துணைப்பதத்தில்விவேகராசனியம்
பவே. (௭)

## வேறு.

புலகதிகள்யாவையுமரிக்கவேபுகலிடமிலாமனநடுக்கு
று, வுலகுபதினாலுமொரிமைப்பிலா வொழியுமறியா
மையினொளித்ததே. (௮)

மனமுமறியாமையுமரிக்கவே
மதியெனொளிவாள்கொடுதுணிக்கவே
முனமுதவுதாயெனுமவிச்சைதான்
முடுகுமதிவாண்முகமுழுத்திடியே, (௯)

பரவுணர்வுவாளினைவிதிர்க்கமா
பருதியெனவேயொளியெறிக்கவே
யிரவுவடிவாகியவவிச்சைதா
னிகலழியவாருயிரொளித்ததே. (௰)

அகலிடமியாவுமதனைக்கொடே
யடையவறியாவனுபவத்தினற்
புகலவருமாயையையறுக்கவே
புரணபரிபூரணமெறித்ததே. (௰௧)

மரணபவவீடுயிர்பரத்தொடே
மன்னவிருசேனையுமனைத்துமோர்
கரணமதுவாதலின்மிகுத்ததே
கருணைநிதியாருளமகிழ்ச்சியே. (௰௨)

வேறு.

இப்படியொன்றுமில்லாவகையெலாமிறந்தபின்று
மப்படியொன்றுமில்லானமைந்திலனமரிறைசை (௰௩)

பின்னரும்வானமாதிப்பெரும்படையெழுப்பஞா
னப், பன்னரும்படையில்யாதும்படும்படி பரமன்
பார்த்தே. (௰௪)

வேறு.

வரவியோமவொலிகோடிசெவியோடுமேடியப்
பரவியோமவிசைஞானவொலிபண்ணியதுவே. (௰௫)

வாதவூறுபலதொக்குவரமன்றுபரமன்
பாதவூறுணவுபற்றியிறவெற்றியிடுமே. (௰௬)

ஊனநாட்டமொளிவந்தனவனந்தவுருவ
ஞானநாட்டவொளிவந்துறநசித்துவிடுமே. (௰௭)

மங்குநாவிறலிருந்தவிரதங்கள்வரவே
யெங்குஞானரதவின்பமிடையின்றியெழவே. (௰௮)

நாசிநின்றபுவிசேர்மணநடக்கநலமே
வீசிநின்றவறிவாகிமணம்விழுங்கிவிடுமே. (௰௯)

ஆக்கையற்றபொருளென்றகமதித்தமதியைத்
தாக்கையற்றபொருடன்னின்மதிதள்ளிவிடுமே. (௨௰)

ஐயமேயமைவதானமனனங்சழியவே
வையமேயமைவதானமனனங்கழியுமே. (௨௧)

யாதுமாயறிவிறந்தபொருளொன்றுமிலதே
யாதுமாயறிவிறந்தவொளியொன்றுமுளதே. (௨௨)



ஊனமாகியவகம்பிரமமாகியதுபோய்
ஞானமாகியவகம்பிரமமாகியதுவே. (௨௩)

வேறு.

ஞானநாடகங்கண்டுளமகிழ்ந்தனனுதன்
வானநாடரும்வணங்கினர்வந்தடிமகிழ்ந்தே. (௨௪)

கேதமாயையும்புதல்வருங்கிளையுடன்மடிந்தார்
போதமாகியசேனையும்பரன்பதம்புகுந்தே. (௨௫)

ருசனிங்ஙனமழிக்கவெண்டிசைகளுங்கீழ்மேற்
பேசநின்றிடுமகிலலோகங்களும்பிணமே. () ஆ எ௩௰.

---

களங்காடு.

எதுதானியம்புவதெனவிறைவியுண்மகிழ்ந்து
போதுநாமெனவிரைவொடும்படுகளம்புகுந்தே. (௧)

வேறு,

தூய்யமாசில்சோதியாகுமேகனெச்சொலப்படும்
வையமாவிபீசனுக்குமாயைமாய்தல்பார்மினே. (௨)

ஆவியாக்கியெல்லையற்றசனனமாக்குமப்பெரும்
பாவியாமம்மாயைமாதுபட்டபாடுபார்மினே. (௩)

வேறு.

அயர்த்துபொருமோகனையளித்தவனைமுன்னம்
மயந்தவறியாமைபொடிபட்டபடிபாரீர். (௪)

மங்குமிடமின்றியொருமாத்திரையினுள்ளே
எங்குமுலவும்மனமிறந்தபடிபாரீர். (௫)

ஆகவடிவாகியுலகாண்டவறிவில்லா
மோகவாசிங்ஙனமுடிந்தபடிபாரீர். (௯)

வேறு.

அமங்கலந்தருழன்மடவார்சூழக்கிடப்பத்தூயவெழிற், காமன்கிடந்தகிடைபாரீர் காகம்பிணங்குமியல்பாரீர். (எ)

கரும்பார்கன்னலென மொழியுங்கனிவாய்பட்டபடிபாரீர், சுரும்பார்குமிழேயெனப்புகழுந்துண்டம்பட்டபடிபாரீர். (அ)

ஆரக்களபச்சேருடி யறிவோர் தமையுந்திறலழிக்கும்
பாரக்கலசப்பயோதரங்கள் பட்டுக்கிடந்தபடிபாரீர்.

வேறு.

தவளத்திணித்திலமோதண்புறவின்முல்லைமுகை
தானேசெய்ய [படி
பவளத்திற்பொதிந்ததெனும்பல்லென்பாய்முடிந்த
பார்மின்பார்மின் (ய)

பிணையென்னமலரொன்ன பெரியதபோதனருளனும்
பேதஞ்செய்யுங்
கணையென்னக்கற்றவருந்துதிக்குங் கண்பட்டபடி
காண்மின்காண்மின் (யக)

வேறு.

பரிபுரபதங்களவைபாரீர் பரிமளமணஞ்செய்குழல்பாரீர், தரிபொருதுகொண்டபடிபாரீர் நலன்மருவமன்பர்பதிபாரீர். (யஉ)



வேறு.

கலைசூழறிஞர்தஞ்செவியுங்
கண்ணுஞ்செவிடுங்குருடுமாய்க்
கொலைசூழ்வகைசெய்திடுங்கொடிய
கோபன்கிடந்தகிடைபாரீர். (யரு)

வேறு.

ஆகமுமாவியும்பொருளுமளித்துநாதற்
கவனருளாலானந்தநாடாளாதே
காகமுநாய்களுஞ்மனும்பிறவுமுண்ணக்
கைவிட்டுக்கிடந்ததிலைகாண்மின்காண்மின். (யசு)

முன்புமிகப்பொருள்பலருந்தேடித்தேடி
முந்தையுடன்கொடுபோகாதிறக்கக்கண்டும்
பின்புமிகப்பொருட்டேடுமேவாவன்செத்துப்
பிணத்தினும்வாயங்காந்தபெருமைபாரீர். (யரு)

வேறு.

அடித்தலைவணங்கநரபால
ரமைச்சரொடிருந்ததிருபாசன்
முடித்தலைகிடந்தபடிபாரீர்
முனைச்செயன்முடிந்தபடிபாரீர். (யசு)

உனவருமகந்தையபிமான
முளவிருண்மனம்பொய்களவாதி
யனைவருமுவந்தகிளையோடு
மடையவுமிறந்தபடிபாரீர். (யஎ) ஆ எடு௲

கூடுவோர்.

என்றுதனிநாயகரிகற்களமியம்பிக்
குன்றுதலிலாவினியகூட்டவுணர்த்தே. (௧)

ஆங்கினிதிருந்தனளணங்குமடைக்குப்
பாங்கினியபேய்மகளிர்பற்பலர்திரண்டே. (௨)

வேறு.

அகமாறீபுறமுமகமாறீயறிவறிவாளேபிறிதறியாதாய்
மகமாறீசுகவடிவாய்கூடவாரீர்கூடவாரீரோ. (௩)

ஈதீதெனநிசழ்வெல்லாமறிவுருவல்லாவில்லதெனுநல்
லேக,வாதீயறிவுருநீதிகூடவாரீர்கூடவாரீரோ. (௪)

துறவீதீயவைமறவியினியவைசொல்லீ துனியறுசொ
ல்லீநல்,லறவீநலன்மிகுமுறவீகூடவாரீர்கூடவா
ரீரோ. (௫)

வேதீவினையொடுகோதீ யழகியமேதாய்விண்முதல்யா
திற்கு, மாதீயணிமிகுசோதீகூட வாரீர்கூடவாரீ
ரோ. (௬)

திருவிஞ்ஞானநல்லுருவீயழிவறுசித்தீபகிர்வறுபத்திசி
ன்,மருவீபுலகியலொருவீகூடவாரீர்கூடவாரீரோ

வேறு.

உயர்ந்தவாரணக்கொம்பேயுலக்கையா
யோங்குபோதகக்காலுரலாக்கியே
பயந்தமாயையின்மக்களிற்பற்கனோட்
பாடமனாருள்பாடியிடித்துமே. (௮) ஆக ௭௬௬.



சும்முலக்கை.

உகைக்குமனத்தாருடையவுரனெல்லாங்குரவனடி
துகைக்குமளவானதுகாண்சும்மேலோசும்முலக்காய்

உளன்றுவும்புறக்கரணமுட்கரணமொடுங்கிடவே
தோன்றுமைதோன்றியதேசும்மேலோசும்முலக்காய்

சான்றுமென்றறிந்திலையோ சகலமுமாய்விடத்தோன்
றுந், தோன்றுமைதோன்றியக்காற் சும்மேலோசும்மு
லக்காய் (௩)

சான்றுகுமறிவொழியச்சாக்கியமாஞ்சகத்தென்றுந்
தோன்றுதுகண்டாயேசும்மேலோசும்முலக்காய் (௪)

விரியுமிடத்துலகறியும்புரியுமிடத்துணர்வறியுந்
துரியமதிற்றுரிசுளகாண்சும்மேலோசும்முலக்காய் ()

ஆங்குணராமையுமுணர்வுமாகியகோளறவிருந்து
அங்கினர்காண்சுகமடைவார் சும்மேலோ சும்முலக்
காய். (௬)

தெரியாதென்பதுந்தெரிந்தவிடத்தல்லாற்றெரியாத
துரியாதீதம்மிதுகாண்சும்மேலோசும்முலக்காய். ()

துரியாதீதந்தன்னிற்புரிந்தானுந்தொல்பிறவித்,
துரிசானதொழியாகாண்சும்மேலோசும்முலக்காய்()

துஞ்சுதல்கண்டாயதிதம்பிறப்பது கண்டாய் துரியந்
துஞ்சல்பிறப்பொழித்தல்காண் சும்மேலோசும்முல
க்காய் (௯)

தொல்லையிறையாகமஞ்சொற்றரியாதீதஞ்சுருதி சொல்லுகின்றபரவுடல்காண் சும்மேலோசும்மூலக்காய். (௰)

கேட்டதென்றறியாதவதீதத்தைக்கேடின்றிச், சூட்டினதுபரவுடல்காண்சும்மேலோசும்மூலக்காய். (௰௧)

நீங்குதலில்லாவறிவேநிகழ்ந்தக்கால்விழிப்பதுவுந், தூங்குதலுமுண்டாமோசும்மேலோசும்மூலக்காய் (௰௨)

சுத்தமாகிகளுமெலாந்தற்சொருபமானபரி, சுத்தமாய்விட்டதுகாண்சும்மேலோசும்மூலக்காய். (௰௩)

கருதவொண்ணாவெண்ணிறந்த காட்சியெல்லாங்கண்ணுன, சொருபமாய்நிகழ்ந்ததுகாண்சும்மேலோசும்மூலக்காய். (௰௪)

தோன்றியவிவ்வுலகமெலாஞ் சொருபமாய்நிகழ்ந்ததெனத், தோன்றியதுந்தன்கண்ணேசும்மேலோசும்மூலக்காய். (௰௫)

எல்லாவண்ணமுமின்றியிருந்தபடியேயிருக்கச், சொல்லாமற்சொல்லியவாசும்மேலோசும்மூலக்காய். ()

எல்லாமாயல்லாதவிறையியல்பையின்னதென்று, சொல்லாடவிரகுண்டோசும்மேலோசும்மூலக்காய் (௰௭)

புலமறுபாழ்வருஞ்சிவன்போதப்பாழ்வருமீசன் சொலவருபாழ்வருஞ்சொருபன்சும்மேலோசும்மூலக்காய், (௰௮)



வையமுயிர்பரமாக்குமாயைப்பாழ்மூன்றுமறத் துய்யசுடர்தானேயாஞ்சும்மேலோசும்மூலக்காய். ()

இடரின்பஞ்செயுமாயையிருளின்பவறிவாகுஞ், சுடரின்கண்டோன்றுமதேசும்மேலோசும்மூலக்காய்! ()

சொருபன்விழிமலரச்சும்மாதிருந்துவிடச் சொருபபரிபூரணமாஞ்சும்மேலோசும்மூலக்காய் ()

வாயுணர்வுமாண்டிடத்தேவாயிலாமட்குடத்திற், றூயமெனநிறைந்ததுகாண்சும்மேலோசும்மூலக்காய்()

ஊமைமொழிகொடுபிரமமோதவுணர்வுற்றபடி தாய்மறையின்முடிவுரைக்குஞ்சும்மேலோசும்மூலக்காய் (௨௩)

தற்பதத்தின்றன்னிலைமைதானறியவோதுதலாத், சொற்பதத்தில்வாராகாண்சும்மேலோசும்மூலக்காய். ()

உற்பலத்தினழகுமண முருப்போலவொன்றின்கண் சொற்படுசத்தியமாதிசும்மேலோசும்மூலக்காய். ()

அல்லேயுங்குழன்மாயையவள்பயந்தவகிலம்வெறுஞ் சொல்லேயாய் விட்டதுகாண் சும்மேலோசும்மூலக்காய், (௨௫)

அலைந்துவருமுளவிகற்பமழிந்துவிடப்பிறவியெலாந் தொலைந்தபடிகண்டாயே சும்மேலோசும்மூலக்காய்.

இன்னதெனமறைமுடிக்குமியலாதவிப்பரிசைச் சொன்னபடிகண்டாயோசும்மேலோசும்மூலக்காய்.

சொல்லாதமறைமுடிவைச் சொல்லாமற்சொன்னதி
னைச், சொல்லாடவிரகுண்டோ சும்மேலோசும்முலை
க்காய். (௨௯)

சாத்திரமென்செயநமக்குத் தர்க்கமயலறுத்தபிரான்
சூத்திரமேவேண்டுவதுசும்மேலோசும்முலைக்காய்()

ஆக ௭௯௪.

---

கூழ்சமைப்பு.

ஏகனதடியிணையிங்ஙனேத்தியே
மோகர்தம்பல்லெலாமுறியக்குத்தியே (௧)

புண்ணியனடியிணைபோற்றிபோற்றியே
திண்ணியபோதகச்செவியிற்றெள்ளியே. (௨)

வேறு,

பாதமாமலர்கணல்கும் பரமனைப்பாடிப்பாடிப்
போதமாவிடித்திராகிற் போனகமாக்கவாரீர் (௩)

செம்பொனுன்மகுடஞ்சூடித் தேசிகனுகவந்த
வம்பொனுரடிகள்சூடா முடிகளையடுப்புவையீர் (௪)

வாழ்வுமாடென்றுமங்கி வள்ளலார்கழலின்வந்து
தாழ்வுறுவறிவிலாளர் தலைகளைத்தடாக்களாக்கீர். (௫)

சொற்பதங்கடந்தவின்பச்சொருபனூர்துணித்துவிட்
ட, வுற்பவவுததிசோரியடையவுமுலையுட்பெய்யீர். ()

தொந்தவன்பாசத்தாலே சுற்றிவன்சமையாய்வந்த
பந்தவித்தனத்தான்ஞானப் பாவகன்றன்னைமூட்டீர்.



நீதண்டம்பெருகமோசஞ் செய்யுமக்காமராசன்
கோதண்டமிரண்டாய்வெட்டிக்கூழடத்துடுப்புக்கோ
[டீர். (௮)

இராப்பகல்பசித்துப்பட்டவிடரினைநினைத்துநெஞ்சி
த்,பாக்கினையொழித்துநல்லபதத்திலேயிறக்கவாரீர்.

வேறு.

என்றநந்தகடத்திருக்கியவின்னமு
தொன்றிறென்றுவிரைந்தெடுக்கவுவப்பொடே. (௰)

தொடைத்துநாரந்தெளித்துத்தொழுதமுழுதையும்
படைத்தமாதின்பரிக்கலம் பார்த்துப்படைக்கவே.()

ஏமதுயாமெனவெண்ணினராவியெலாமெடுத்
தமுதுசெய்திருகைவிளக்கினளன்னையே. (௰௨)

பஞ்சபாசமிலையெனக்காயெனப்பண்ணியே
பஞ்சபாசமடைக்காயமுதுபடைப்பமோ. (௰௩)

பத்தராவிபருகுதிருப்பவளத்திலே
வைத்தவாரமுதத்தினின்மிச்சில்வழங்கவே. (௰௪)

வருகவென்றுகணங்களைவள்ளல்களெள்ளுரு
குருகுநெஞ்சொடழைப்பர்கடம்முடனுண்ணவே()

ஆக ௮௱௯.

---

வேறு-சூழ்வார்ப்பு.

இலகும்போதக்கண்விழித்தங் கெல்லாம்போதமெனக்காணு, துலகும்போதமாயையெனவோதும்பேய்களீர்வாரீரோ. (௧)

காணுஞ்சித்துத்தான்பரமன் காட்டுஞ்சித்தென்றுள்ளபடி, பேணுமுண்மைப்பொருட்பேதம் பேசும்பேய்கள்வாரீரோ. (௨)

வேதாவிரோதமறவொன்றும்விட்டிடத்பலவாதாடிலெனப், பேதாபேதநிலைநிற்கப் பேசும்பேய்கள்வாரீரோ.

சுருதம்பொருளெல்லாமழியுங்கருத்தற்றதுவேவீடென்று, சுருதிசொன்னபொருட்சொல்லுஞ் சுகதப்பேய்கள்வாரீரோ. (௪)

எல்லாவுலகங்களுமுடிந்தவிடத்தேமுத்தியெல்லாமாயல்லாதென்றப்பொருள்சொல்லு மருகப்பேய்கள்வாரீரோ. (௫)

பொன்றுமுடல்போவதுமுத்தி யின்பப்பொருளேபொருளல்லா, தொன்றுமில்லையென்றோதுமுலகாயுதப்பேய்வாரீரோ. (௬)

பானத்தந்தக்கரணத்தின் பதைப்பையறுக்கவெனக்கேட்டுப், பானத்தந்தப்பதைப்பறுக்கப் பார்க்கும்பேய்கள்வாரீரோ. (௭)

அறவேதனைப்பட்டருந்துவதுதேடித்திரியாதாரமுதம், பெறவேவிம்மியலமாக்கும் பேய்களெல்லாம்வாரீரோ. (௮)



துன்புற்றுழலவமையுமெனிற்றூரத்திரியினூரமுதன்னுடன்புற்றிருக்கவேண்டுதிரோவெல்லாப்பேயும்வாரீரோ.

வேறு.

பொல்லாதவுடலமெலாம்பூரணமாகும்பரிசுபோதகத்தால், வல்லாளன்வென்றகளக்கூழுண்ணும்வகையடங்கவாரீர்வாரீர். (௰)

வேறு.

நினைத்துமறந்திச்சகத்தை யெல்லாநேரோயொறுத்துப்பாராண்ட, மனத்தையறுத்துமறு மாற்றந்தின்று கொள்ளவாரீரோ. (௰௧)

போக்கும்வரவுமறுத்தகழல் போற்றிப்போதக்கூழுண்டு, வாக்குமனனுமிறந்திடத்தே வாளாவிருக்கவாரீரோ. (௰௨)

ஆக்கையறுத்துக்கரணங்களறுத்துச்சிவபரமறுத்து வாக்கையறுத்தானந்தக்கூழுண்ணவாரீர்வாரீரோ. (௰௩)

வேறு,

விடாயெல்லாமென்றுபொன்னடிசூட்டியே
வேதகஞ்செய்தருள்வீரனைவாழ்த்தியே
விடாயெல்லாங்கெடவுண்ணவரும்படி
மீளுமுள்ளக்கலத்தைவிளக்கியே, (௰௪)

இல்லறந்துறவென்றிலைவேண்டினர்
யாவரோனும்வருகென்றிடுவதே
நல்லறமெனயாவர்க்குநல்கினர்
நாதர்வெல்களக்கூழுண்ணநல்கியே. (௰௫)

வேறு.

அல்கைகள்கூழிற்கலமரவாரமுதத்தைப்பெற்
றுலகுயிரீசற்பகிர்வறவெல்லாமுடனுண்டே. (௧௬)

மெத்தித்தாகங்கெட நுகர்மெய்ஞ்ஞானானந்தந்
தித்தித்தாகமயிர்க்காறுறுந்தேக்கிட்டே. (௧௭)

திருகறப்போதப்பேய்பேசியேயோதிருஞானம்
பருகப்போகப்படுவதுபண்டைத்தரமுண்டோ (௧௮)

வேறு.

துஞ்சலின்றியுணர்வின்றிமயலின்றியயலுந்
தொடர்வுமின்றியிடரின்பமுதலின்றியெவையு
மெஞ்சலின்றியிதுவென்னுமியல்பின்றியுளதா
மியாவையும்பிரமமாகியிருந்தபடியென். (௧௯)

ஆக ௮௨௮.

---

வேறு-குணலைவாழ்த்து.

அலைமிசையானுமயன்முதலா
மண்டருந்தேடற்கரியவரும்பதந்
தலைமிசையானமைபாடீரே
தன்கருணைத்திறன்பாடீரே. (௧)

ஒருநயமின்றியானுழைக்கு
முற்பவநோய்கெடப்பார்த்தருளுந்
திருநயனங்களைப்பாடீரே
செய்யகருணையைப்பாடீரே. (௨)



ஒழிவற்றசோதியுணர்வுதன்னை
யுளங்கைக்கனியெனக்கண்டுகொள
வழியிட்டவீரனைப்பாடீரே
வார்த்தையொன்றுலென்றுபாடீரே. (௩)

மரணபவங்கண்மடிந்திடவே
வடிவுபுனைந்துவரும்பெருமான்
சரணநிகழ்ந்தமைபாடீரே
சுற்ததமப்பதம்பாடீரே. (௪)

உன்னவரிதென்றுபநிடங்க
ளோதும்பொருளையொருமொழியிற்
சொன்னவிரகனைப்பாடீரே
சொருபாநந்தனைப்பாடீரே (௫)

பவமாயம்வேரறப்பார்த்திறைவன்
பதத்திலும்பண்டைநாமொழிந்து
சிவமாயிருந்தமைபாடீரே
சிவப்பிரகாசனைப்பாடீரே. (௬)

புத்திக்குமெட்டரிதாயபொருள்
புவனியில்வந்தைம்புலன்களினுந்
தித்திக்குமாறினைப்பாடீரே
தேசிகராசனைப்பாடீரே. (௭)

ஊனநடங்கண்டுமுன்னநம்மை
யோருருவாய்வந்துணர்த்திக்கண்ட

ஞானநடந்தனைப்பாடீரோ
நடராசன்றனைப்பாடீரோ. (அ) ஆ. அ௲ளீ.

---

மங்கலவாழ்த்து.

புரியும்விழிதந்தகழல்வாழியே
புறமகமிருந்தபொருள்வாழியே
துரியமுமிறந்தசுடர்வாழியே
சொலவறவிருந்தசுகம்வாழியே. (க)

வேறு.

பேதமபேதமறுத்தவன்வாழியே
பேதமைதீரவளர்த்தவன்வாழியே
போதமபோதமறுத்தவன்வாழியே
பூரணபோதசமுத்திரம்வாழியே. (உ)

துறந்தவர்கைப்பட்டிருந்தவன்வாழியே
தொடர்ந்துபிடித்துப்புரந்தவன்வாழியே
யிறந்தவுளத்திற்றிகழ்ந்தவன்வாழியே
யிரங்கியெனக்குத்தருங்கழல்வாழியே. (௩)

மறந்துநினைக்கப்படாதவன்வாழியே
மயங்குமனத்தர்க்கிலாதவன்வாழியே,
பிறந்துமரிக்கப்படாதவன்வாழியே
பெருங்கருணைக்கற்பகாடவிவாழியே (௪)

வேறு,

உருவருவொடுளதிலதுமொழிவில்பரன்வாழியே
புளபொருளையுணரிலவையுதறுமவன்வாழியே



கருவழியையழியவருகரசரணன்வாழியே
சுழலும்விழிகருணையுடனருள்சொருபன்வாழியே. ( )

அழகுபெறுமௌனபதமருளுமவன்வாழியே
யடியருளமுருகவருமருளமுதன்வாழியே
பழகிவருபவதுயனாயழிசெய்பரன்வாழியே
பரகருணைவடிவினிகழ்பரமகுருவாழியே. (௬)

அறிவுதனிலுருகுமறிவருளுமவன்வாழியே
யகமிதமுமறுவிழியினமருமவன்வாழியே
பிறிவதறுபுலனுருகவருளுமவன்வாழியே
பெருவிழியினுருவழிசெய்பெருநிலையன்வாழியே. ( )

வேறு.

அன்னையெனக்கயலாக்கினன்வாழியே
யல்லலறுத்தெனைநோக்கினன்வாழியே
யென்னையெனக்குறவாக்கினன்வாழியே
யின்னமுதத்திருவாக்கினன்வாழியே (அ)

வேறு.

தொழுமவராவிவாங்கியவங்கணன்வாழியே
சுகமகமானசாந்திநெஞ்சினன்வாழியே
யெழுபவநாசமாஞ்சொல்லொன்றினன்வாழியே
யிமையவர்மூவர்தாந்தொழும்பிரான்வாழியே. (௯)

கருதியகோலமாந்திருமேனியான்வாழியே
கதிரவர்சோதிதாம்பெறுஞ்சோதியான்வாழியே

சுருதிசடேடுவான்பொருளாயினன்வாழியே
சுகமகமாகியாம்பெறுஞ்சோதியான்வாழியே. (௰)

வேறு.

தொழுகுலம்விளங்கவிமையோரொன்றும்வாடநீள்
சுருதிகளநந்தமுகமாய்நின்றுதேடமூ
வெழுகுலம்விளங்கவடியேனின்றுசூடவே
யிணையடிவழங்குசொருபானந்தன்வாழியே. (௰௧)

வேறு,

மூவர்தேவர்வாழியென்றுமுடிவணங்குமிருகழற்
றேவதேவன்வாழியேசிவப்பிரகாசன்வாழியே. (௰௨)

வேறு.

அலைவயென்றங்கலையிறுதர்க்கப்பசாசமோசகன் வாழியே, யதுநீயென்றங்கருமறையுச்சத்திருேதுமோர்பொருள்வாழியே, சொலவரவென்றுந்தொடர்வருசந்சிற் சுகாதிகாரணன்வாழியே, சொருபானந்தன்கலையுனேதத்துவப்பிரகாசமாமுனிவாழியே. (௰௩)

ஆ௳ அசக.

மோகவதைப்பரணி

சத்துவநிருபகம்-முற்றிற்று.





பதினெட்டாவது

# அமிர்தசாரம்.

## தத்துவதரிசனம்

வெண்பா—கலிக்கட்டளை.

### கடவுள்வணக்கம்.

ஞானக்கண்ணுளர்க்குஞானந்தச்சுடரா
மூனக்கண்ணுளர்க்குலகமாய்-வானத்
தனக்குப்பெறவரியதற்சொருபன்பொற்று
ளெனக்குப்பெறவெளிதேயின்று. (௧)

### அருளிறைவணக்கம்.

அறியாமையாத்திமிரத்தந்தனுய்விட்டி
னெறிகாணலின்றிநிலையற்-றிறுவேற்கு
ஞானஞ்சனத்தாலேநாட்டந்தனைத்தந்த
கோனுந்தொழக்கடவகோ, (௨)

### வேதச்சிறப்பு,

இதினுள்ளதெல்லாக்கலைகளினுமுள்ள
திதினில்லாதியாவையினுமில்லை-யதினாலே
யாதுமறியவிரும்பினன்யாதுமுள
வேதமறிவதன்விரைந்து, (௩)

ஆகமச்சிறப்பு,

கற்பவர்களெப்பொருளுங்காண்பவர்க்குக்கண்ணது
முற்பவநோய்க்கெல்லா மொருகடவோந் - தற்பொரு
யாதாவுணர்ந்தாரவர்க்கதுவாமெக்கலையு [டான்
மோதாதுணர்ந்தானுரை, (௪)

அறிஞருரைச்சிறப்பு,

எந்தக்குலமாயென்னெந்தக்கவியாயென்
னெந்தச்சமயத்தெவராயென்-சிந்தைத்
துறவிதருஞ்சொல்லேதுய்தாவதல்லாற்
பிறவிதருஞ்சொல்லேபிற, (௫)

நூற்பெயர்,

வேதாகமமோதிமெய்ம்மைவிளங்குதற்குப்
போதாதெவர்க்கும்புருடாயு-வோத
வுறுமமிர்தசாகரத்தேயுள்ளமதனாற்
பெறுமமிர்தசாரமெனும்பேர், (௬)

அவையடக்கம்,

வேதமொழிப்பொருளை விண்ணவர்கள் மூவருமுன்
போதவுணராவுலகறிய-வோதுகேன்
வானின்றவல்லிருளைமாற்றுநின்றேனெழிப்பன்
யானென்றமின்மினியேயான், (௭)

நன்னெறியுரைத்தல்,

இம்மைமறுமைநிலையன்றெனவிடுக
செம்மைநெறிநடக்க சித்தந்-தமைமீட்



தம்மையுணர்ந்தோர்தலைப்படுகேதத் துவத்தின்
மெய்ம்மையறிகவினைந்து, (௮)

அருமையுரைத்தல்.

பெறவரிதுமக்கட்பிறவிபெற்றாலு
மறிவுநூலாய்தலரிதே-யதினுந்
துறவுடையனாதலரிதேயதின்மெய்
யறிவுடையனாதலரிது. (௯)

ஞானிலக்ஷணம்.

அறிவுள்ளதல்லதிலதென்றறிவான்ஞானி
யறிவான்முழுதமறிவா-னறிவ
னறிவறியாமையறவிருந்தவண்ணல்
மறையோதுவான்பொருடான். (௰)

ஞானிசீலம்.

அருந்தல்பொருந்தலவையொக்குமேனும்
பெருந்தகையோருள்ளம்பிறிதே-திருந்து
மனத்தின்வேறேபதியுமைந்தனுமம்மாதின்
றனத்தின்வேறல்லவேதான், (௰௧)

ஞானிசரிதை,

நீதெனநன்றெனச்சிந்திப்பரோதெளிந்தோர்க்
கோதனமன்றேயுலகெலாம்-பாதவத்திற்
றீதாதனன்றுதல்சிந்தித்திடச்சாத
வேதாவிற்குண்டோவிதி, (௰௨)

ஞானிபெருமை,

விண்ணேபெரிதுமிகவிசன்கைவழியா
மண்ணேயதுபெற்றமாமாயை-யெண்ணிற்
சிவனிற்பெரியாரிற்சிந்தையிலார்வைத்தா
ரவனிற்பெரியாரவர், (௰௩)

ஞானியேவற்சிறப்பு,

எங்கேவெளிப்படுகவென்றானெழின்ஞானி
யங்கேவெளிப்படுதற்காதரித்தே-யெங்கும்
பரமனவனேவல்செயப்பார்த்திருக்கும்யார்தான்
றரமவனேவறனக்கு, (௰௪)

ஞானிபூசைச்சிறப்பு,

அவனுண்டதண்டமெலாமுண்டதயனுஞ்
சிவனுந்திருமாலுமுண்டான்-சிவமென்றும்
பூரணஞானியைப்பூசித்தான்பூசித்தான்
காரணனைக்கண்ணாரக்கண்டு. (௰௫)

ஞானியையிகழ்ந்தவர்கேடு,

எழின்ஞானியையிகழ்வார்கேட்டாரிகழ்சேட்
டழலாரனுமதித்தார்நால்வர்-கழலுதன்
மேதகவென்றவனைவிட்டகலாதார்பஞ்ச
பாதகமொன்னப்படும், (௰௬)

கூடாவொழுக்கம்,

யோகத்தினுண்மையுணர்வின்றிப்பூண்பொருட்டா
லேகத்தினின்றேமௌனவியம்பி-மோக



மனத்தவலமாற்றாதவல்வேடர்தம்மை
நினைத்தவருங்காணார்நெறி, (௰௭)

கனனவிதி,

நன்ஞானஞானிமரியாளொருநாளு
முன்ஞானமோகவிருண்முருக்கித்-தன்னுருவக்
கண்டபொழுதேகழியுஞ்சூக்கவுடல்கன்மபல
முண்டுபோந்தூலவுடல், (௰௮)

தத்துவஞானிதிருமேனிதாங்கினு
ருத்தமலோகத்தினும்பரா-முத்தன்
றிருக்கோயில்கொண்டவிடந்தேவாலயமென்
றிருக்கோதுகின்றவிடம், (௰௯)

உலககாரணம்,

அணுவென்பர்மாமாயையென்பரணுவின்
புணர்வென்பர்பூதமேயென்பர்-குணனென்ப
ரொவ்வேதுவுமோதுகவிதற்கேதேதுவென்னு
வவ்வேதுவேயேதுவாம், (௨௰)

காரணகாரியவேறின்மை,

மன்னுமுதற்பொருளின்மன்னுதவிவ்வுலகம்
பின்னமெனுமாறுபேசற்க-பொன்னே
யணியாவதன்முன்னுமப்பொனேகாய்ச்சி
மணியானபோதுமறித்து, (௨௧)

ஞானானந்தச்சுடராய்நன்றாகிபொன்றான
தானாகியபடத்திற்றான்றன்னு-னுவா

பார்த்தகட லுலகமாமோவியமெழுதிப்
பார்த்துமகிழ்ந்தான்பரன், (௨௨)

நாலிலநீர்வைமுட்டைநால்வகையோனிசுரர்
மானிடநீர்வாழ்பறவைமாகிருமி-ஞானமிலா
மண்பட்டதாபரமென்றேழாய்வரும்பவநா
றெண்பத்தினுன்காயிரம், (௨௩)

ஊர்வபதினொன்றுமொன்பானுமா னுடவர்
நீர்பறவைநாற்காலிநேர்பத்தாஞ் சீர்திகழு
மூவாறுந்தாபரங்கண்முப்பத்துமும்மையோ
ராவாரொருபதாறும், (௨௪)

அணுப்பிரவேசம்,

ஆனகடங்களளவிலவற்றுட்புகுந்து
வானகந்தானின்றவாறொக்கும்-யோனிகளெண்
பத்துநான்காயிர நாறுகப்படைத்தவற்று
ணித்தனுர்நின்றநிலை, (௨௫)

அழிப்பு,

ஆனவுடம்பனைத்துமைம்பூதத்தேயழியும்
வானுதிபூதமிறுமாயையினி-ஞானு
வொழிந்தமாமாயவிருளுள்ளொளியாயும்ப
ரொழுந்தஞானத்தாலிறும், (௨௬)

பவகாரணம்,

செறிபொருளதாகித்திகழ்பளிங்குபோல
வறிபொருளதானவறிவன்றன்-றன்னை



யறியப்பிறவியறலாற்பிறவிக்
கறியாமையாகுமடி, (௨௭)

உடலுற்பத்தி,

ஆதபன்வானுகுதியாதல்குமதினேடதியா
மோதனமுண்டாயிருநீருண்டாகு-மாதுடனுண்
டன்னுருவாமிக்கநீர்க்கண்டஞ்சமங்கவிழ்தல்
வன்னிபுழுவுண்டேன்மலடு, (௨௮)

பிண்டகோசம்,

சுவர்செய்துமண்டசையாச்சோரிநீராக
விவரங்கள்காலியங்கவிட்டுக்-கவர்கால்க
ணட்டுக்கைவைத்துநரம்பிட்டிரம்பெறவே
கட்டித்தோல்வேய்ந்தவகங்காண் (௨௯)

பிண்டவுருவிற்பிறத்தலாற்கெர்ப்பத்திற்
பிண்டவுருவாயிருத்தலா-ஞுணும்
பிண்டமிடவேண்டுதலாலுடற்பிண்டம்
பிண்டமெனப்பேர்பெறும், (௩௰)

அண்டகோசம்,

நிலனேழுசூழவருநீரேழுகேழ்பா
தலனேழுவானேழுதம்பக்-குலகிரிக
ளெட்டுநெடுமேருகிரியேமருடகஞ்சூழப்
பட்டுளதோரண்டப்பரிசு, (௩௧)

அண்டபிண்டவேறின்மை,

வெளியசைவுவெம்மை நெகிழ்வுரமாம்விண்கா
லொளிபுனன்மண் கண்ணுதயனுள்ளங்-குளிர்மதியங்

கொண்டுய்த்தவனறிவுகோசமாம்பிண்டத்து
மண்டத்துமுண்டோவயல், (௬௨)

விடுபற்று,

நெடுந்தூரமண்மைநினைவுபோமாறுங்
கடும்பரிகால்வைத்துவாங்கல்-படங்களைந்தோர்
புட்டகம்வேறேபுனைதலிவைபோலும்
விட்டுடலங்கொள்ளும்வினை, (௬௩)

உற்பத்தியாந்தாதைவாயுவுடன்கூடிப்
பொற்புற்றகொங்கையர்தம் போகத்தே- கெர்ப்பத் [தைக்
கொண்டுதைசெல்லுமெனக்கூறுவிர்கூறீர்கண்
மண்டுகஞ்சென்றவழி, (௬௪)

உடலிழிவு,

மணமொன்றியமாந்தர்வாயுப்போங்காட்டிற்
பிணமென்றுபேரிட்டுப்பொத்தக்-கணங்வந்து
புட்குத்துமிவ்வுடலிற்பொல்லாங்கொழிந்திருப்ப
தெட்குத்துமுண்டோவிடம், (௬௫)

குடும்பவிழிவு,

திடன்படுசீலந்திகழ்கல்விகேள்வி
யிடம்படுமேதைசீரெல்லாம்-பசுமட்
குடம்படுநீர்போற்குடும்பியைக்கைவிட்
டுடப்போடுகூடவுகும், (௬௬)

போகவிழிவு.

சிந்தாகுலமனிதர்சீசீசெவிமுதலா
மைந்தானுமீடழிவரல்லரோ-வைந்திலொரு



வேட்கையசுணமிபம்விட்டில்மீன்வண்டு
கேட்கைமுதலோரொன்றிற்கேடு. (௬௭)

மகளிரிழிவு,

எரிகொள்ளுமல்லவெறிப்படைகொண்டல்ல
வருநஞ்சுங்கூற்றுங்கொண்டல்ல-கருதிநெஞ்சத்
தம்மாதர்தம்மைப்படைத்ததணியிழையார்
தம்மாலேயாகத்தகும், (௬௮)

பொருளிழிவு,

இன்னலாமீட்டுங்காலீட்டினுலியாவரையு
மொன்னலராக்குமுயிரிறுக்கு-மன்னு
மனத்தைவேறாய்மயக்குமானடுக்கஞ்செய்யுந்
தனத்தின்வேறுண்டோதவறு, (௬௯)

அரசிழிவு.

முரசுவிளங்குதம்முற்றத்திற்றெற்றி
யரசுவணங்குங்கழலா-ரொருசுணங்கன்
கவ்வியகாலிற்கடைகடோறுஞ்சுழல்வர்
வெவ்வியசொல்லவெறுத்து. (௭௰)

சுவர்க்கவிழிவு.

பொதுமாதர்தோளேபுணர்வதமிர்த
மதுபானமுண்டேமகிழ்வ-தெதுகோடி
சாவார்பிறப்பார்சதுமுகனோர்நாளினிது
தேவாதிபரொய்துஞ்சீர். (௭௧)

## நிலையாமை.

உலகினிலைநிற்பதொன்றில்லையென்றே
தலைவர்கண்மூவருஞ்சாற்றினா-ரஃதே
மலைவுறுமார்க்சர்மதமுமதனு
னிலையின்மையொன்றுநிலை. (௬௨)

## துக்கத்தொகுதி.

கருக்குழவிகௌமாரங்காளைப்பருவம்
விருத்தமழைவெய்யில்வீசும்-பனிக்கால்
கருத்திலுறக்கமுணர்ச்சியெக்காலத்
தொருத்தனின்பத்தையுறும். (௬௩)

## துறவு.

மடம்படுமிப்பிறவிமாற்றநினைவார்க்
குடம்புமிகையென்றுணர்வுற்-றடங்கத்
துறவாமனிதர்க்கெளிதன்றேதுஞ்சிப்
பிறவாநெறியைப்பெற. (௬௪)

## புத்தன்.

க்கணமுமான்மாவுங்காரணனுமில்லை
சகலமுமாமநித்தஞ்சார்வார்- பிறவி
வகைவினையுண்டுமதிபொன்றமாய்தல்
சுகதன்றன்முத்தித்துணிவு. (௬௫)

காரணமேயான்மாக்கணபங்கித்தப்
பூரணமோவீசன்வான்பொய்யே-மரணமே



வீடென்றானுத்திகரின்வேறாவிப்புத்தனெனு
மூடன்றான்சொன்னமொழி. (௬௬)

## சமணர்.

அருவுருவுண்டில்லையொன்றுபலவாம்
பொருளியல்பதானளவேபோத-மருகர்க்
குறுவினைவிட்டாலுலகும்பர்வீடு
குறியதற்கெட்டுக்குணம். (௬௭)

வெளியிற்பறந்துபோய்வீடெங்குப்பெற்றாய்
குளிர்வெம்மைகண்டாயோகூட-வுளதில்லை
யொன்றுபலவென்றாயூனளவென்றாயுணர்வை
யென்றுமதிகண்டாரியார். (௬௮)

## உலோகாயதம்.

இறந்தார்பிறவாரிலதுவானீச
னறம்பாவமாயிழையார்கூடல்-சிறந்த
நலனூர்சுவர்க்கநரகம்பிரித
லுலகாயதன்றனுணர்வு. (௬௯)

கடவுட்குநன்மைசாக்காடுநரகங்
கடவுள்வலிகாட்டுங்கண்ணுங்-கரும
முடியாமைகாட்டுமுனைவினையைமாத
ரடைவதேகாட்டுமென்று. (௭௰)

## மீமாஞ்சன்.

நரகுசுவர்க்கத்திங்குநன்றுங்கருமத்
தருபிறைதானன்றியில்லை-பிரமமொலி

நாடுங்குணன்புத்திஞானமில்பாடாணம்போல்
வீடென்முன் மீமாஞ்சகன். (௫௧)

சித்துச்சடமாகையோமுத்திசெய்வினைகள்
சுத்தச்சடமீயவற்ரு-சுகதுக்கம்
புத்திகுணமாயிற்பொன்றுமோவான்குணமாஞ்
சத்தப்பிரமமோதான். (௫௨)

## நியாயம்.

அணங்குற்றவான்மாவநேகம்வியாபி
குணம்புந்தியாமுத்திகூறிற்-பிணம்போல்கை
மெய்யாமிறைவனையும்வீடுகட்டுக்கேதுவா
நையாயிகநூனலம். (௫௩)

செயாதுவினைச்சடமாய்ச்சென்மத்தைச்செய்யிற்
றயாவிலனுமவ்வீசன்ருனும்-வியாபி
குணமாகிற்புத்திக்குக்கூடாதொடுக்கம்
பிணமாகையோவீடுபேறு. (௫௪)

## வைசேடிகம்.

முத்தியினிர்க்குணனய்முன்னங்குணங்குணியாய்ப்
பத்தியினன்முத்தியிறும்பாவனையாந்-சுத்தச்
சடர்ப்பலராயவத்தைசார்தலான்மாக்கள்
கடனென்ருன்வைசேடிகன். (௫௫)

ஆவசடலங்களான்மாவேயாமனம்போ
லாவுமவத்தையுறுமுன் னுணர்விற்-பாவனையாற்



கூடுமோவீடுகுணப்போய்க்குணியுண்டோ
கூடுபோய்த்தியுண்டோசொல். (௫௬)

## சாங்கியம்.

பகுதிபுமான்மெய்ப்பகுதிப்பாலேவிகுதி
சகலந்தனதென்கைபந்தமாம்-விகுதியாம்
யாதும்பகுதியுடையதெனக்கில்லையெனும்
வேதனஞ்சாங்கியன்றன்வீடு. (௫௭)

முன்னரோயுண்டேற்பகுதிய தான்முத்தியிலை
பின்னுஞ்சடமாம்பகுதி-பெறக்கூடா
தன்னுலேவீடெய்துமாகினீசற்குருவைக்
கொன்னேவிரும்பியதென்கூறு. (௫௮)

## சைவம்.

மடவன்பசுபதிவாலறிவன்பாசஞ்
சடமாமியல்புசமமா-முடன்வியாபம்
பண்டுளவைமூன்றும்பசுபாசம்போயிறையைக்
கண்டுறைதல்சைவன்கதி. (௫௯)

ஈசனதுதோற்றமேதெல்லாம்வியாபித்தாற்
பாசமிலாதான்பதியென்னிற்-பாசமெனில்
விண்டிடாதாம்பதியால்மெய்கரணம்வேறுண்டாங்
கண்டிடாநின்றகதிக்கு. (௬௰)

## சம்மேளிதசைவம்.

பாசமாம்பந்தம்பசுப்பெத்தமுத்தனு
மீசனநாதியிவர்ஞானம்-பூசையா

மம்மோகமாற்றியவரொன்றல்வீடென்றான்
சம்மேளிதச்சைவன்றான். (௬௧)

பெத்தமதாதிகெடுமானபின்கெடுமே
முத்தியும்பாசந்தான்முன்னாள-தேற்கெடுமே
சத்தியெனில்வெம்மைபோனாற்றழலுண்டோ
வுத்தியிலதிரண்டொன்றாகாதொன்றுகெடின்
முத்திகெடலோமொழி. (௬௨)

பாசுபதம்.

அகிலமிறைமுன்பணுத்திரள்செய்யுஞ்
சகலாத்துமாக்கடளையா-மலங்க
ளாகமலம்பூசையாலொப்பாகைமுத்தி
பகர்கின்றான்பாசுபதன். (௬௩)

சகமதணுவாஞ்சடஞ்செய்யுமாறென்
புகலணுவும்பூதமேயன்றோ-வகமில்
கிரியையாம்பூசைகெழுமலங்கள்போக்கி
லிரியுமிருளாலிருள் (௬௪)

வாமம்.

தன்னியசுட்கச்சமயிகளெவ்வுருவும்
பெண்ணாருவிற்காணும்பிறப்பதெலா-மண்ணறவே
புத்தியுமுத்திப்பொருளுந்தரும்பிணமே
சத்தியிலாதவெலாந்தான். (௬௫)

மேதினியொன்றைவிளக்குமோவித்தின்றி
மாதுதருகுவமையற்-பிறப்பன்றோ



போதமழிபுலைநீர்புத்திக்குமுத்திக்குஞ்
சாதனமானதோசாற்று. (௬௬)

பைரவம்.

ஏசமாம்பைரவமெண்டத்துவமாயெண்கலையா
யாகியஞாலந்தனார்ச்சனையாற்-போகமா
முத்தரிக்குநால்வரானால்வராயோகத்து
வித்தரிக்குமுண்ணறவால்வீடு. (௬௭)

ஏகத்துவங்கெடுமேயெட்டானுன்மற்றவையே
யாகிற்கலைசொல்லாதாயழியும்-போகமுனக்
குள்ளதோவன்றோதருவாருகுக்குருத்தோ
கள்ளதோநல்குங்கதி. (௬௮)

காளாமுகமாவிரதம்.

வேணியென்பக்குமுதறரித்துமெய்விரதந்
தாணுவுமைப்படியிற்றப்பாமற்-பேணிப்
புணைதங்காதானசிவலோகம்புகன்மா
விரதங்காளாமுகன்றன்வீடு. (௬௯)

தவவேடங்கொண்டவுடனழிந்தாற்போமே
யுவையோநின்றீடேற்றுமுன்னைச்-சிவலோக
மெங்குமெனக்காணுதேயோரிடத்தேயேறினார்
சங்கையில்வீழ்வதற்குத்தான். (௭௰)

சிவாத்துவிதம்

அணுதிசிவஞ்சகத்துமாருயிருமாகத்
தனுதருவைத்தானேபகுத்துத்-தனுவொழியப்

பேறிழவில்லைபெறுவானுமீவானும்
வேறிலதென்றறிகைவீடு. (௭௧)

தானேசகத்தாய்ப்பகரினதுதான்சடமாந்
தானேபிறப்பாக்கிற்றானொழிக்கிற்-றானேதன்
கண்ணைக்கலக்கிக்கடவுளாமூற்சிவம்போய்
வெண்ணைக்கழுமோவிளம்பு. (௭௨)

வைஷ்ணவம்.

நாராயணாயதிருநாமந்தரித்தலா
லாராதனையாலடிமையெனப்-பேராழி
கோயிற்பொறியால்வைகுந்தப்பதந்தந்தை
தாயிற்றருஞ்சீதரன். (௭௩)

மண்ணாலிடுநாமம்வாளெரியாலிட்டகுறி
புண்ணாமுடம்பொழிந்தாற்போகாதோ-விண்ணாடில்
வைகுந்தமேவுதிருமாலுருவங்காணவொரு
மெய்கொண்டிருக்குமதோவீடு. (௭௪)

மாயாவாதம்.

அவிகாரமேபிரமமாயையினாலாகி
யிவிகாரமெல்லாமிறக்கும்-பவமான
வூனதும்பொய்ஞானமுதித்ததும்பொய்யஞ்ஞானம்
போனதும்பொய்மற்றுமெலாம்பொய். (௭௫)

அவிகாரத்தன்மையவிகாரங்காணி
லவிகாரந்தானல்லவாகு-மவிகார



மாயையற்றியில்விகாரமாயையாய்
வீபுமதாரறிவார்வேறு. (௭௬)

சௌரவாதம்.

தோற்றநிலையிறுதிசெய்தலாற்றொல்லுலகி
லேற்றவிருளெல்லாமிரித்தலாற்-போற்றவருஞ்
சங்கரன்மாலான்முகனாய்த்தற்பரனாய்நிற்கின்றான்
வெங்கதிரோனல்லதிலைவேறு. (௭௭)

ஈசன்முனியவெயிறுவிழவிழுந்தான்
மாசுணவாயின்மறைப்பற்றான்-றேசினா
லுற்பவமாமுள்ளத்திருளொழியானோருருவன்
றற்பரனாவல்லனோதான். (௭௮)

சோமவாதம்.

போதல்வருதலுளன்பூரணனுமல்லவிவன்
பாதிநாடோன்றான்பகலவன்றான்-சோதியா
யிந்திரசாலவிருளொழியானென்னலாற்
சந்திரனாலென்செயலாந்தான். (௭௯)

ஊழ்வாதம்.

தனுக்கள்வினையேதரில்வினைதான்செய்ய
முனாகமுளதாய்முடியு-மனாதியெனி
லெஞ்ஞான்றுமுத்தியிலதாகுமிவ்வூழிற்
கஞ்ஞானமாகுமடி. (௮௰)

மந்திரமானதெலாம்வார்த்தையேயவ்வார்த்தை
[illegible]ற்றரவானின்குணனதிலவ வற்து

பலியாதருள்குருவைப்பாவியானாகில்
வலிதானவன்றன்வலி. (௮௧)

மருத்துவாதம்.

மருந்தானொருவரிம்மாநீருலகத்
திருந்தாரெனக்கண்டதில்லை-வருந்துவதென்
யார்க்குமழிவுவிளைப்பதாம்யாக்கையெனா
நீர்க்குமிழிபூண்கட்டி நீ. (௮௨)

சாதிசங்கற்பம்.

ஆதிபேதந்தானிலாமையறிந்தவர்கள்
சாதிபேதஞ்சிறிதுஞ்சாற்றுவரோ-சாதிகுல
நல்லார்தொழத்தக்கஞானமுடையவரே
யல்லாரிழிகுலத்தாராம். (௮௩)

தீர்த்தசங்கற்பம்.

அறன்சாராவுள்ளத்தறியாவழுக்குப்
புறன்சாருநீராலேபோமே-திறன்சாரா
வோடுந்தீர்த்தந்தானுடற்கேயுளம்விளங்க
வாடுந்தீர்த்தந்தானறிவு. (௮௪)

அருச்சனாசங்கற்பம்.

சலமுழுகிநீர்தேடிப்பூத்தேடிச்சாணி
நிலமெழுகியர்ச்சியாநிற்பர்-புலமிலவ
ருள்ளத்தேநின்றவுலப்பில்பரமானந்த
வெள்ளத்தேநின்றுவிடாய்த்து. (௮௫)



அத்துவாசங்கற்பம்.

இந்நெறியிந்நெறியென்றெம்மார்க்கமும்பகர்கு
வந்நெறியெல்லாமறிந்தவறி-வெந்நெறியா
லெய்தலாமந்தநெறியென்றறைந்தமறை
மெய்தவாவிட்டினெறி. (௮௬)

சாத்திரசங்கற்பம்.

ஓதுமுறையின்பொருளுணர்ந்துள்ளபடி
போதமறியாப்புலவர்நூ-லோது
மொருகோடிநூறாயிரத்தானுமுண்மை
யருகூடுபோகாரவர். (௮௭)

பிரமாணசங்கற்பம்.

அறியப்படுமளவைகொண்டளவையெல்லா
மறியக்கடவவறிவை-யறிய
விருப்புற்றிடுவான்விறகதனைக்கொண்டு
நெருப்புச்சுடுவானிகர். (௮௮)

தர்க்கவாதம்.

தர்க்கநெறிவென்றக்காற்றம்பமிகப்பெருகுந்
துக்கமிகப்பெருகுந்தோற்றக்காற்-றர்க்க
நிலைபெறுவதொன்றல்லநெஞ்சுகன்றக்கத்துந்
தலைபறியேயெய்துபயன்றான். (௮௯)

வாதத்தொகுதி.

உரைத்ததுரையாதுரைக்குஞ்சமயம்
பரத்தையறிவுற்றபான்மை-மரத்தி

னவயவத்திலேரொன்றறிந்தார்மரமா
வவயவத்தைக்கொண்டவாறும். (௯௰)

### கேடுகண்டிரங்கல்.

கருத்துகட்கேடாய்ச்சதிபலவாவீச
லுளாத்ததென்றென்றுணரவொட்டா-புரித்திங்
கிலதுளதென்னுமுளதிலதென்னுங்
கலதியர்கடஞ்சமயக்கத்து (௯௧)

### நன்னெறி.

எய்தவெளிதாமிறையருளில்லையே
லெய்தவரிதாமியாவர்க்கு-மெய்தெளித்தா
லெம்மார்க்கத்தோடுமிகலற்றிருக்குமதே
சன்மார்க்கமாகுநெறிதான். (௯௨)

### அட்டாங்கயோகம்.

இயமநியமாதனம்வாயுவிசையங்
கமையுறுபிரத்தியாகார-மமைவுறு
தாரணைதக்கதியானஞ்சமாதியென
வேரணியும்யோகங்களெட்டு. (௯௩)

எமமுறுமியமமீனாந்திவைதன்னிற்
றாய்மையருளுண்சுருங்கற்பொறைசெவ்வை
வாய்மைநிலைமைவளர்விப்பமாற்றுவ
காமங்களவுகொலை. (௯௪)

வாய்மையெனப்படுவதியாதெனின்வாய்மையினத்
தீமையிலாதவெனச்செப்புவர்க-டீமைமிக



வோதும்பரமாமுலப்பிலாவொன்றென்பர்
வேதமுடிவுணர்ந்தோர்மெய். (௯௫)

மம்மர்செய்யாமைவதையாமையெவ்வுயிர்க்குந்
தம்முணர்ந்தோர்தம்மைவதையாமை-தம்மை
யெறிபடைகானீரெரியிற்படாமை
யறிகையெனவறிவரால். (௯௬)

மதுகையில்வஞ்சனையிலோர்பொருளைவெளவு
மதுகளவென்பரறிஞர்-மதமோதிற்
றன்னதல்லாதவுடம்பைத்தனதுதா
னென்னல்களவாகுமென்று. (௯௭)

அரிவையர்தம்மையணுகாமையாகும்
பிரமசரியமதினும்-பெறுதற்
கரியபிரமத்தொன்றுனர்பிரம
சரியமுடையவரோதான், (௯௮)

தாயோடுதந்தைமகத்தாரந்தான்சத்துருவாந்
தீயவனுநேரொக்கக்காணுமது-செவ்வையாத்
தூயநிலைமைசுருதிநெறித்துணிவு
தாயர்போன்றன்புதயா. (௯௯)

மிகைசெய்தார்தம்மைத்தாம்வென்றுவிடவேண்டி
லிகல்செய்யாதென்றும்பொறுக்க-விகல்செய்யிற்
கோபத்தையொன்றையுங்கொல்கவதுவல்லா
ருபத்தையெல்லாமறும். (௱)

அற்புதயோகிக்கனுகூலமானவு
ணற்பவுணவதெனவறிக-வாடுகின்ற

பொற்புறுநீரிற்புறந்தூய்மையுட்டூய்மை
சிற்பொருளாலுள்ளத்தெளிவு. (௱௧)

நியமம்.

தவஞ்செபஞ்சந்தோடமாத்திகந்தானஞ்
சிவன்றருநல்விரதஞ்சித்தாந்தக்-கேள்வி
யுவந்தசிவபூசையொண்மதிநாண்பத்து
நிவந்தநியமங்களாம், (௱௨)

தவநோன்பாலூண்சுருக்கித்தம்முடம்பைவாட்ட
லெவனுன்பிறவியெனக்கெய்திற்-றெத்தாலே
சிவமானமுத்தித்திறனேதென்றோர்தல்
பவமாறப்பண்ணுந்தவம். (௱௩)

கூடியதுகொண்டமைதல்சந்தோடங்கோகநக
னூடிமுதலாநவில்கின்ற-வெப்பதமும்
வீடிப்பரமுளத்தேமெய்காண்மகிழ்ச்சிசந்
தோடமெனுஞ்சுருதிச்சொல். (௱௪)

ஆத்திகம்வேதநெறித்தோற்றமாமாதரத்தோ
டீத்தல்பயன்கருதாதீகையாங்-காத்திரத்தால்
வந்தித்தல்வாயாரவாழ்த்தன்மனத்திறையைச்
சிந்தித்தல்பூசைசெயல், (௱௫)

பிரமந்தானுய்த்தெளியப்பேசுமறைக்கேள்வி
திரிவன்னத்தோர்கட்குஞ்சித்தாந்தக்-கேள்வி
புனைபில்புராணந்தான்பொய்யிலாமாதர்
சாதவேளாளர்க்குமாம். (௱௬)



மந்திரந்தாரகமாதியாமன்னிருடிச்
சந்தமதிதெய்வந்தான்கொண்டு-முந்தி
யுணைவாய்துடியுள்ளலொன்றிற்கொன்றோரா
யிரமாம்பயனுண்டிவை. (௱௭)

வெருதேயரிதெனினுமென்மேல்விருப்ப
மருதேயிதுவேயறம்பொரு-ளின்ப
மிருதானவீடுமெனக்குரவனேவன்
மருசெயன்மாவிரதமாம். (௱௮)

ஆசின்மறைநெறியினுதரவுதான்மதியான்
றேசவழக்கிற்சிறந்த-மறைநெறியி
லாசிதுவென்னுங்கருமத்தருவத்துக்
கூசுதநாணமெனக்கொள். (௱௯)

ஆதனம்.

பத்திரங்கோமுகம்பங்கேருகஞ்சிங்கஞ்
சொத்திகம்வீரஞ்சுகாதனம்-முத்த
மயிலாசனத்தண்டமாயோகியர்கள்
பயிலாசனங்களிவைபத்து, (௱௰)

செவ்வேயுடலுங்கழுத்துஞ்சிரமுமுற
வெவ்வாதனத்தேயிருந்தவர்க்குங்-கைவந்து
வாதமுதனோய்நலியாமதியுடையோ
ராதனமென்பதது. (௱௰௧)

பிராணயாமம்.

வாங்கிப்பதினாறுமாத்திரைநான்மடங்கு
தாங்கித்தற்பாதிதனைவிடக்-கால்வலத்தால்

பொற்புறுநீரிற்புறந்தூய்மையுட்டூய்மை
சிற்பொருளாலுள்ளத்தெளிவு. (௱௧)

நியமம்.

தவஞ்செபஞ்சந்தோடமாத்திகந்தானஞ்
சிவன்றருநல்விரதஞ்சித்தாந்தக்-கேள்வி
யுவந்தசிவபூசையொண்மதிநாண்பத்து
நிவந்தநியமங்களாம், (௱௨)

தவநோன்பாலூண்சுருக்கித்தம்முடம்பைவாட்ட
லெவனுன்பிறவியெனக்கெய்திற்-றெத்தாலே
சிவமானமுத்தித்திறனேதென்றோர்தல்
பவமாறப்பண்ணுந்தவம். (௱௩)

கூடியதுகொண்டமைதல்சந்தோடங்கோகநக
னூடுமுதலாநவில்கின்ற-வெப்பதமும்
வீடிப்பரமுளத்தேமெய்காண்மகிழ்ச்சிசந்
தோடமெனுஞ்சுருதிச்சொல். (௱௪)

ஆத்திகம்வேதநெறித்தோற்றமாமாதரத்தோ
டீத்தல்பயன்கருதாதீகையாங்-காத்திரத்தால்
வந்தித்தல்வாயாரவாழ்த்தன்மனத்திறையைச்
சிந்தித்தல்பூசைசெயல், (௱௫)

பிரமந்தானுய்த்தெளியப்பேசுமறைக்கேள்வி
திரிவன்னத்தோர்கட்குஞ்சித்தாந்தக்-கேள்வி
புலாயில்புராணந்தான்பொய்யிலாமாதர்
சாதவேளாளர்க்குமாம். (௱௬)



மந்திரந்தாரகமாதியாமன்னிருடிச்
சந்தமதிதெய்வந்தான்கொண்டு-முந்தி
யுரைவாய்துடியுள்ளலொன்றிற்கொன்றோரா
யிரமாம்பயனுண்டிவை. (௱௭)

வெருதேயரிதெனினுமென்மேல்விருப்ப
மருதேயிதுவேயறம்பொரு-ளின்ப
மிருதானவீடுமெனக்குரவனேனவன்
மருசெயன்மாவிரதமாம். (௱௮)

ஆசின்மறைநெறியினாதரவுதான்மதியான்
றேசவழக்கிற்சிறந்த-மறைநெறியி
லாசிதுவென்னுங்கருமத்தருவத்துக்
கூசுதுநாணமெனக்கொள். (௱௯)

ஆதனம்.

பத்திரங்கோமுகம்பங்கேருகஞ்சிங்கஞ்
சொத்திகம்வீரஞ்சுகாதனம்-முத்த
மயிலாசனத்தண்டமாயோகியர்கள்
பயிலாசனங்களிவைபத்து, (௱௰)

செவ்வேயுடலுங்கழுத்துஞ்சிரமுமுற
வெவ்வாதனத்தேயிருந்தவர்க்குங்-கைவத்து
வாதமுதனோய்நலியாமதியுடையோ
ராதனமென்பதது. (௱௰௧)

பிராணாயாமம்.

வாங்கிப்பதினாறுமாத்திரைநான்மடங்கு
தாங்கித்தற்பாதிதனைவிடக்-கால்வலத்தால்

வாங்கலிடத்திலிடத்தேவலத்தில்விட
வோங்காரமுச்சரித்துக்கொண்டு. (௱௰௨)

## பிரத்தியாகாரம்.

ஒருக்காலுமுள்ளமுபாதிவேறாகப்
பிரித்துணர்வைக்காண்டலும்பின்ன-வுபாதி
களைத்துப்பருகிவெறுங்கண்ணுக்குதலும்
பிரத்தியாகாரமெனப்பேசு. (௱௰௩)

## தாரணை.

ஆயவுடம்பனைத்துமைம்பூதத்தேவைத்து
மாயையிலேவைத்தமாபூத-மாயை
பரத்திலேவைத்தப்பரமேதானகத்
தரித்தலேதாரணைதான். (௱௰௪)

## தியானம்.

பொருளின்மைகாண்டல்புலத்தியானமுள்ள
பொருணினைதல்புத்தித்தியானம்-பொருளறிந்த
போதமறிதல்போதந்தியானம்போதமே
யாதல்பரத்தியானமாம். (௱௰௫)

## சமாதி.

காயமுதலையாகாயாதியிலழித்து
மாயவிருளினவைமாள்வித்து-மாயை
யொருக்கித்தன்னைற்றானுளபரத்தோடொன்றா
யிருக்கைசமாதியியல்பு. (௱௰௬)



## அணிமாதிபலவிகழ்ச்சி.

நல்லவியோகெட்டுஞானத்திற்கங்கமெனச்
செல்வமணிமாதிசிந்தைசெய்வார்க்-கல்ல
விரும்பின்சுவர்கரும்பின்கோலாலிடந்து
விரும்பித்தவிடெடுப்பார்வேறு. (௱௰௭)

## ஈருடல்.

வேய்ந்ததோல்சோரிதசைவெள்ளென்புமச்சைசுக்கிலஞ்
சேர்ந்ததிரடுலதேகமா-மேய்ந்த
வகனுற்கரணமீரைம்புலன்வாயு
பகர்சூக்கம்பத்தொன்பது. (௱௰௮)

## பஞ்சகோசம்.

அன்னம்பிராணன்மனஞானமானந்த
மென்னுங்கோசங்களிவையைந்தும்-பன்னுங்
கிரமத்தாலொன்றிற்கொன்றுள்ளாகுங்கேடில்
பிரமத்தாலாகுநிலைபேறு. (௱௰௯)

## பஞ்சாசயம்.

பந்திக்குமாமாசயம்பக்குவாசய
மந்தமலமுவர்நீராசயங்கண்-மைந்த
ருறைதருகெர்ப்பாசயமென்றுடற்கே
யுறைதருமாசயங்களைந்து. (௱௨௰)

## ஈரேழுநாடி.

ஈரேழுநாடியிடைபிங்கலைசுழினை
வாருணைநாப்பூடாவைரி-யலம்புருடை

காந்தாரிலடைபசுனிசங்கினியத்தி
சிகுவைகுகுபுருடன்கூ, (௱௨௧)

ஈரேழுவாயு.

பிராணனபானனுதானன்வியான
னராவிசையன்றேவதத்தனுமை-கிருதரனே
அந்தரியாமிமூக்கியன்பிரவஞ்சன்
வைரன்சமானன்வளி, (௱௰௨)

ஷடாதாரம்.

மூலாதிட்டானமணிபூரகம்விசுத்தி
யேனுமனாகதமாஞ்ஞை-யிருமூன்றின்
மேலாதாரத்துமதிவெய்யோன் விசுத்தியிற்றீ
மூலாதாரத்துறையமூண்டு. (௱௰௩)

அஷ்டவிகாரம்.

உன்னவருங்காமகோபமுலோபமுடன்
மன்னுறுமோகமதமாச்-சரியந்
தன்னைமிகமதிக்குந்தம்பம்பொறாமையெனு
மின்னல்விகாரங்களெட்டு. (௱௨௪)

ஷட்பாவனை.

ஒன்றிற்பிறத்தலுளதாதலோங்கிவள
ரன்றிப்பருத்தலறத்தேய்தல்-பொன்ற
லெனுமாறுபாவமுமிவ்வுடற்கேஞான
னமாத்தனக்கில்லைகாண், (௱௨௫)



சட்கோடி.

வீடுபற்றில்லைபிறிதொன்றினாற்றன்னை
வீடுபற்றில்லைபிறிதொன்றைத்-தன்னாலும்
வீடுபற்றில்லைதன்னாற்றன்னையிவ்வாறு
கோடியுமில்லைதனக்கு. (௱௨௬)

சடூனம்.

அன்னபானங்கள்பிராணனதேயாகு
மன்னுமகிழ்வுமடிவு-மனத்தன
வின்னலாமூத்தலிறத்தலியாக்கைய
றுன்னுக்குநாடிலிலது. (௱௨௭)

முக்காரகம்.

மயலுடல்வாக்குமனனென்றுமாந்தர்
துயருறுமின்பமுந்துன்பமுந்-துய்க்கச்
செயலுணாசிந்தனை தீமையுநன்று
முயல்வனகாரகமூன்று. (௱௨௮)

மும்மலம்.

உருவுணரவொண்ணாவகையுணர்வையொன்றி
மருவியவாணவமாயை - கருமங்கண்
மூக்குந்தவிடுமுமியுமிவையாக்கை
யாக்கும்பவவித்துக்காம். (௱௨௯)

முக்குணம்.

சுத்தமாஞ்சாத்திகமுந்தூய்மையிருமதமு
மத்திமராசதமுமாந்தர்க்கு-நித்த

மறிவறியாமையவற்றின்புணர்ச்சி
குறியுடையமூன்றுகுணம். (௱௬௰)

முப்பிணிக்குணம்.

நீதிகருணைநிலைமையளிமானம்
போதமவையின்மைபோரிற்-புறங்கொடுத்தல்
மேதக்கவர்ப்பழித்தல்வேண்டாதவைபிதற்றல்
வாதக்குணனுமதி. (௱௬௧)

அறிவுடைமையைந்தடக்கலாகத்தழகு
தெறியுடைமைசொல்வண்மைநீர்மை-பெறவரிய
வத்துவிதஞானத்தாதரவாமாண்மையிவை
பித்தகுணனுவதெனப்பேசு. (௱௬௨)

பொறிபிறழாமைபுகழ்கருணையூக்கங்
குறிமதுகைகோபமிலாமை-பொறையோர்
நிபமின்றியவீகைநெஞ்சத்துவகை
கபமொன்றியகுணனுக்காண். (௱௬௩)

முத்துக்கம்.

ஆதிபெளதிகமாதிதெய்விகமான்மிகமென்
ரோதுதுயர்மூன்றினுட்க-வருமிடியின்
வாதமழைவேனில்வன்னிபனியாதி
பெளதிகமாகும்படர். (௱௬௪)

வாயுமுதனேவுமானுடர்மாப்பறவை
பேயசுரர்நாகத்தார்பீடையாம்-காயத்தின்



மானஞ்சினமவாமாச்சரியமாதிமனத்
தானதுயராதியான்மா. (௱௬௫)

இடனில்கருப்புகுதலிங்குப்பிறத்த
னடையுடன்மூத்தனரைத்தன்-மடமை
நினைவறச்சாதனிரயம்புகுத
லனையவைதெய்விகமாம், (௱௬௬)

மூவேடணை.

மகப்பற்றதாகும்வருஞ்சுற்றமெல்லாஞ்
சகப்பற்றுச்சங்கற்பமெல்லா-முகப்புற்ற
வெப்பொருளுமத்தப்பற்றிவ்வேடணைமூன்று
மெய்ப்பொருள்கண்டால்விடும். (௱௬௭)

மூவவத்தை.

காணுமதுநேரேநனவாநிலைபேறு
காணாமைகாணுமதுகனவா-மொன்றையுங்
காணாதொழிகைசுழுத்தியாங்காணாமை
காணுங்கட்கில்லையவை. (௱௬௮)

நாற்கரணம்.

ஐயமனமபிமானமாங்கார
மையலறவேதுணிதன்மாமதியாஞ்-செய்ய
வருசிந்தனைசித்தமாகுமவையே
யொருநான்காமுட்கரணமொன்று; (௱௬௯)

### ஐம்பூதம்.

காசினிநீர்தீகால்வான்கந்தஞ்சுவையொளியூ
றோசைமாபூதமுறுகுணங்கள்-மாசில்
செவிமெய்வாய்கண்மூக்குச்செப்பியநுண்பூத
மவையறியுமைம்புலன்களாம். (௱௪௰)

ஓதுகுணம்வான்முதலாவொன்றிற்கொன் றேறுமுறை
யீதனடைபோக்குதலின்ப-நீதிவாய்
கையொடுகால்பாயுருபத்தங்கருமங்கள்
செய்யும்புலனாகச்செப்பு. (௱௪௧)

பூதநிறம்பொன்வெண்மைசெம்மைகருமைபுகை
யோதுமுருவமதற்குணாக்கில்-நீதி
சதுரமதிபாதிமூன்றுறுகோண
மதியமாம்வட்டமவையாம். (௱௪௨)

### உண்ணிலை.

புத்திகருமப்புலன்பத்ததின்விடயஞ்
சத்தவசனாதிதான்பத்துச்-சித்த
மகமானவன்னான்கறிவானொருவ
னகமாகியவிருபத்தைந்து. (௱௪௩)

### புறநிலை.

நகைமயிர்தோலென்புசிரைதண்ணிணநீர்மூளை
யுதிரம்பெலம்பசிதாக-முறக்க
மிதுனமறப்பிருப்புமேலோங்கலோடல்



கதிகடத்தன்மானபயங்காதல்கதநா
ணிதமாம்புறத்திருபத்தைந்து. (௱௪௪)

### இருபத்தெட்டு.

விகுதியிருபத்துமூன்றும்பகுதியு
நாலாறுகண்டபுருடனுங்-கால
முயர்த்தவியோமம்வியோமாதிதமென்
றியம்புமிவையிருபத்தெட்டு. (௱௪௫)

### தத்துவமுப்பத்தாறு.

தலமுதலான்மாவீறுசத்திசிவம்வித்தை
சலமில்சதாசிவமீசன்-கலைமாயை
யேறுவிச்சைகாலமிராகநியதியையைந்
தாறளத்தஞ்சுத்தமரோ. (௱௪௬)

### தத்துவந்தொண்ணூற்றாறு.

பூதநிறங்கோசம்புறநிலையுமுண்ணிலையும்
வாதவிகாரமலங்குணங்க-ளாதார
மேகபுருடவினையஞ்சாலவத்தையென
வாகவிவைதொண்ணூற்றாறு, (௱௪௭)

### தத்துவநிச்சயம்,

உலவாததத்துவத்தினுண்மையுணர்ந்தா
லிலவாமினவியம்பலென்னை-பலவாகக்
கண்ணிலவுமாசுடையார்கண்டாற்பலவாமோ
தண்ணிலவொன்றல்லவோதான், (௱.௪௮)

குணசம்பந்தாவவத்தை,

முத்திறனுன குணத்தன மூன்றவத்தை
யுத்தமமாஞ் சாத்திகமா முணர்ச்சி-தான்கணு
மத்திமராசதமாண்ட சுழுத்திதா
னத்தமதாமதமதாம், (௱௪௯)

அவத்தாந்தரவவத்தை,

நனவுமுதலவத்தைநாலவையோரொன்றின்
நனவுமுதலுங்கண்டார்-கனவா
நனவுமுதலுங்காணூர்கள்காண்பர்
நனவாகஞானகனம், (௱௫௰)

நனவினனவுபுலன்வழக்கமாகு
நனவிற்கனவுநினைவா-நனவில்
மனநினைவின்மைசுழுத்திநினைவின்மை
தனைநாடுதறுரியந்தான், (௱௫௧)

கனவினனவுபோற்காண்டனனவாங்
கனவினிற்கண்டுமறத்தல்-கனவாங்
கனவிற்சுழுத்திகாணுமைகாண்பானை
யனுமதித்தலாமற்றது, (௱௫௨)

சுழுத்திநனவொன்றுந்தோன்றுமைதோன்றல்
சுழுத்திகனவாஞ்சுழுத்தி-சுழுத்தி
யரியவழிவாலழிக்கைசுழுத்தி
துரியமாஞ்சொல்லிறந்தபாழ், (௱௫௩)



துரியநனவாமிதமுணர்ந்தபோதந்
துரியகனவாமகமுணர்ந்த-போதந்
துரியச்சுழுத்திவியோமந்துரியந்
துரியம்பரமாகச்சொல், (௱௫௪)

ஆதாரகெதாவவத்தை,

சந்தித்திடம்புருவந்தன்னினிலைசாக்கிரமாங்
கந்தரத்தினிற்கைகனவாஞ்-சுழுந்தியா
விந்தமெனுமிதயமேவலாமுத்திக்கு
நால்விரலினுலாவது, (௱௫௫)

கரணகெதாவவத்தை,

நனவிற்பதினுற்கரணமுநான்கு
கனவிற்சுழுத்திகருத-லறமூன்றுந்
தனதாகைவேறுகைதான்றுரியமற்ற
தெனதியானற்றவிடம். (௱௫௬)

அவத்தைக்கழிவு,

ஒருக்கநனுப்போங்கனுப்போமுளத்தை
தரிக்கத்தற்றியானத்திற்றற்சுழுத்தி-போகு
மரிக்குஞ்சமாதிதுரியமதீதம்
புரித்துப்பரம்விளங்கப்போம், (௱௫௭)

தரிசனுவத்தை,

சுழுத்திநனவின்வரிற்றோன்றியிடுஞ்சிவன்
பழிப்பினதீதத்திற்பரமன்-விழித்தவனேற்

நீதொருங்கவாண்டகுரவன்றிருக்கோல
மேதொருங்கித்தோன்றுமென, (௱௯௮)

மாவாக்கியம்,

அதுநீயானுயென்னுமப்பதங்கண்மூன்றி
னதுவென்பதுபிரமநீயென்-பதுசீவ
ஞனுயெனும்பதந்தானவ்விருவனாக்கியமா
மூனுமுபாதியொழித்து. (௱௯௯)

ஓங்காரம்.

புகலுமறையவத்தைகாலம்புவன
மிகலுகுணந்தீயிறைவர்செய்கை-தகவே
யகாரவுகாரமகாரமதனுற்
சகலமூந்தாரகமாம். (௱சூய)

அசபை.

அஞ்சவுருவிருபத்தோராயிரத்தறுநூ
றெஞ்சலறநின்றியம்பாமற்-ருனியம்பித்
தஞ்சப்பிரமத்திற்ருன்வேறன்றென்னுமதே
துஞ்சலொழிக்குந்துணை. (௱சூக)

ஸ்ரீபஞ்சாக்ஷரம்.

சிவமுதற்றத்துவங்கடேவதைகள்செய்கை
யவனிமுதற்பூதமவத்தை-புவனங்கள்
கோசம்பொறிபுலன்கள்கூறுங்கரணமெலா
மீசன்றிருவஞ்செழுத்து. (௱சூஉ)



ஸ்ரீஅஷ்டாக்ஷரம்.

நாராயணுயநமவென்பொருள்சீவ
னேராரிறையேகமென்றறிகை-பேர்வேறு
காரணகாரியகாயத்தானென்ருகும்
பூரணபோதப்பொருள். (௱சூஉ)

வாக்கியவிவேகம்.

ஊக்கியறுதியிடவொண்ணுவொருதன்னைப்
போக்கியிலாதபொருடா-னருளாலே
பாக்கியத்தால்வந்துபலிக்கினலதில்லை;
வாக்கியத்தார்காணுமாறு. (௱சூகூ)

சீவபரவேறுபாடு.

அறிவானறிவனெனவாகத்தேசீவ
னிறையோனென்பாருண்டிருவர்-பிறியாச்
சுபாசுபங்களாலிவரைச்சொல்லவருபேத
வுபாதிகளானல்லதுருவொன்று. (௱சூச)

சீவலக்ஷணம்.

இகமகமெய்தமிரண்டுதொழிலு
மதியதவையறிந்தமாத்திரமே-சீவ
னிதனபவங்கடனக்கில்லைநித்த
னதனையறிவானவன். (௱சூரு)

பரலக்ஷணம்.

எப்பொருட்குங்காரணமாயெப்பொருட்குமீசனு
யெப்பொருட்குத்தோற்றநிலையிறவா-வெப்பொருடா

னல்லாதில்தாயகமும்புறமுநிறைந்
தெல்லாமறிவானிறை. (௱௬எ)

சிவபரவேறின்மை.

உபாதியொழிந்தாலுயிர்பரங்களொன்றே
சுபாசுபாராய்நின்றதோற்ற-முபாதி
கடாகாயமாகாயம்வேறாகக்காண்கை
யடாகாணறிவொன்றேயாம். (௱௬அ)

மாயாவிவேகம்.

அறியாதமாயைக்கடியறியத்தேடி
னறிவாலறியவொணாதாகு-மறியாமைக்
கேதுவறியிலறிவாலிருட்கேது
சோதியைக்கொண்டறிந்துசொல். (௱௬௯)

உலகவிவேகம்.

போதக்கண்பூதங்கள்பொய்யாமவைமெய்யாம்
பேதக்கடாதிப்பிறழ்வுகளிற்-பேதங்கள்
சுத்திகையின்வெள்ளியின்மெய் தோன்றப்படுங்கனவு
நித்திரையைப்பாரநிலை. (௱எ௰)

அயலாகமெய்போலநந்தபேதத்தை
மயலாகக்கண்டமாமாயத்-துயில்போனு
லெண்படுமிவ்வுலகமுண்டாமாறெங்ஙனே
கண்படைபோயுண்டோகனு. (௱எக)

வன்னியிருக்கமரம்வன்மிகையூனுணதே
தன்னிகழ்ச்சியின்மேவித்தன்மையா-ஞன்ஞன



தன்னிகழ்ந்தாலுண்டோசகத்துன்பஞ்சற்குருவால்
வன்னிகண்டாலுண்டோமரம். (௱எ௨)

ஞானமுதன்மை.

யோகாதிமூன்றுமுணர்வதனுக்கங்கமா
மாகாதெனிற்பதங்களாயழியுந்-தேக
மொழியவருமுத்தியொன்றுதற்குஞான
விழியையலதில்லைவேறு. (௱எ௩)

ஞானலக்ஷணம்.

பொறிவாயறிபுலன்கள்போதக்கரண
வறிவானவெல்லாமடங்கி-யறிவா
யறிவானறிவதறியும்பொருளென்
றறியாதறிவதறிவு, (௱எ௪)

ஞானப்பெருமை.

அலையிலேகன்மமடியிலேயாக்குந்
தலையிலேஞானந்தரிக்கு-மலையா
தருமறைநூலேயறியுஞானத்தின்
பெருமையறியார்பிறர் (௱எ௫)

ஞானபூசை.

இன்பக்கண்ணீராட்டியேத்தியெழின்மலரா
வன்பிட்டுத்தம்மையமிர்தாக்கி-முன்புற்ற
சிற்சடமெல்லாஞ்சிவமாகநோக்கல்சிவத்
தர்ச்சனையாகுமது. (௱எ௬)

ஞானயோகம்.

யோகத்தபாவமெனும்யோகமதுகைகூடி
னேகப்பொருளதனுனெய்தியிடு-மேக
மதுவாமிதுவன்றெனுவகண்டமான
வதுவாகைமாயோகமாம். (௱எஎ)

ஞானவலி.

புணர்பாவபுண்ணியங்களெண்ணிறந்ததெல்லா
முணர்வாமெரிகொளுவினுண்டோ-வுணராமை
கூடவெந்தேருததுண்டோகுழைந்தமரங்
காடுவெந்திப்பட்டக்கால். (௱எஅ)

யோகநழுவுதல்.

யோகத்தாலேகத்தைக்கூடாதிடையினுயிர்
போகிற்றுன்பொல்லாவுலகிற்-புகாநல்ல
பாகத்தானெய்துபயனெல்லாமெய்திப்பின்
யோகத்தான்முத்தியுறும். (௱எகூ)

ஊழ்வலி.

தந்தவறிபாமைபோகவுந்தான்போகா
திந்தவுடனிற்பதென்னென்னி-னுந்துங்
குசவன்கைவிட்டாலுங்கூடாதிகிரி
விசைவந்திடாதேவிட. (௱அய)

முத்திசாதனம்,

தருபயன்வேண்டாத்தருவினைகள்சாந்தி
கருதிகள்கேள்விதுறவி-குருவைப்



பெறுதற்கிங்கேதுபெறற்கரியமுத்தி
யறிதற்கிங்கேதுவவன், (௱அக)

ஆசாரியலக்ஷணம்.

சிறையாமுடன்முதல்சித்தமீருக
விறையோனேயானல்லெனென்று-மறைநீ
யதுவாணுயென்றதெதுவானேனென்று
லிதுநீகாணென்பானிறை. (௱அஉ)

ஆசாரியன்மகிமை.

உள்ளந்தனினின்றொளித்தான்பரன்குரவன்
கள்ளந்தனைத்தவிர்த்துக்காட்டினுன்-வள்ள
லருவானகோலமோவக்கோலங்காணக்
குருவானகோலமோகூறு. (௱அ௩)

அனுசாரியலக்ஷணம்.

துயிற்புணர்ப்பாற்கெர்ப்பந்தொடுகடனீராமை
மயிர்ப்படாமின்மினியின்வன்னி-முயத்கோ
டெருத்தின்பான்மெய்புணர்வில்லாதான்பண்ணுங்
குருத்துவமுநேராகக்கொள். (௱அச)

பக்குவலக்ஷணம்.

காயநிலையின்மைகண்டான்கருத்துச்செந்
தீயினவிவுற்றுன்சித்தஞ்-சினவரவின்
வாயுறுமண்டுகத்தின்னெஞ்சம்வரியுழுவை
தாயவனுள்ளஞ்சமம், (௱அரு)

## அபக்குவலக்ஷணம்.

தம்பாற்றவந்தூய்மைவாய்மைதயாவிலா
ரும்பனடிபேணுருள்ளபொரு-ணம்பார்
பொருள்செய்யவாதரிப்பார்போகநினைவா
ரருள்செய்யலாகாதவர். (௱௮௬)

சித்தியாநிற்குஞ்சிலர்க்குவிபரீதப்
புத்தியாகுஞ்சிலர்க்குப்போதமே-சுத்தமாம்
பானீயமொன்றேனும்பாம்புண்டானஞ்சினு
மானீயுநல்லவமிர்து. (௱௮௭)

## சிஷசரிதை.

நிழல்போற்றவாயாரக்கண்மல்கவுள்ள
மழல்சேர்மெழுகினழிவெய்த-யாக்கை
யெழில்சேர்குருபரன்றன்னேவலேசெய்க
நிழல்போலமுன்பினுநின்று. (௱௮௮)

சந்தனந்தாம்பூலந்தாராதனஞ்சயன
மந்தனம்பொய்வெய்யமாற்றங்கள்-சிந்தைக்
கரவபிமானங்களுஞ்சிகளிப்பின்ன
குரவன்முன்மேவாதுகொள், (௱௮௯)

## சம்பிரதாயலக்ஷணம்,

அங்கையுற்றநீராக்கொண்டாக்கைபொருளாவி
பங்கயக்கண்ணாற்கொண்டுபண்டைவினை-சங்கையறு
பூதமல்முழுதும்போதமெனநிகழ்த்தப்
பாதமலர்வைத்தான்பரன். (௱௯௰)



## ஊனுயிர்வேறுபாடு.

ஆக்கைமுதற்சித்தமீறுகவெப்பொருளு
நோக்குமவன்றன்னைநோக்கா-தவைச்டமாச்
சாக்கியாநின்றவவன்சற்குருவாவந்தபரன்
வாக்கில்வெளிப்படுங்காண்வந்து. (௱௯௧)

சீலக்கட்டளை முற்றிற்று.

---

## அநுபவக்கட்டளை.

## சிவதரிசனம்.

போக்குமனனெருக்கிப்போதமங்கில்லாமை
நோக்கியநோக்காலந்நோக்கத்தை-நோக்கென்றுந்
நோன்றுதவண்ணம்போய்த்துஞ்சிற்றிருளறிவாச்
சான்றாகிநின்றேனுன்றான். (௧)

வினைப்பயனென்னையினிமேவாவிண்ணுதி
யனைத்துமழிந்துமழியே-னெனக்கின்று
மூன்பக்கங்கிழ்மேன்முதலிடையீறென்றனவு
மென்பக்கத்தானேனியான். (௨)

இல்லாதுமுள்ளதுமெல்லாமறிவேனு
னெல்லாப்பொருள்கட்குமேதுநா-னெல்லா
வுலகும்படைத்தழித்துக்காத்துணர்வாயொன்று
யிலகும்பரமீசன்யான். (௩)

## துரியதாஷிணம்.

விரிந்தாலுலகறியுமேனுக்சாதுள்ளே
புரிந்தாற்றனையுணரும்போத-மருந்தவா
மாட்சியுடையபரமெனவோமற்றிதன்
காட்சியுமாட்சியுங்கண்டு. (௪)

கரணங்களிற்கலந்துகாணுமைநின்றுகன்
கரணங்களையொருக்கிக்கண்டான்-றனைத்தான்
சரணியாய்நின்றவிவனேதேகண்டாய்
மரணம்பிறப்புற்றமால். (௫)

## அதீததரிசனம்.

அறிவென்பதனாலறியும்பொருளு
மறிவுமறிவானுமாகும்-பிறிதின்றிச்
சொல்லாடவில்லாத்துரியாதீதம்பிறக்க
வெல்லாமவிழவிரு. (௬)

தேய்ந்துதெரிவுதெரியாமையென்பதற
மாய்ந்ததெனவும்வகையில்லை-மாய்ந்ததுவும்
போந்தவிடத்தேபுகலுமஃதொழிய
மாய்ந்தவிடத்தில்லைமற்று. (௭)

## வியோமதாஷிணம்.

அடங்குகையாலேயதீதமுநின்னை
மடங்கொள்சுழுத்தியைமானுர்-திடங்கொள்ள
தில்லாக்கனவேதுரியநிலையிரண்டு
மல்லாமையாலவத்தையாம். (௮)



## பரதரிசனம்.

அதீதம்பொருளென்றலப்பொருளேதென்று
னதீதம்பொருளாவறிந்த-புதனொருவ
னுண்டாங்காணென்றுலீறுரைத்தாலுரைத்தலுமே
கண்டானதுகாணுங்கண். (௯)

பிறிதற்கறிவிருந்தபெற்றிபேனெனை
வறிவிற்கறிவாவிருந்த-வறிவை
யறிவேயறிகின்றதன்றியறியப்
பிறிதேனுமில்லைபிறழ்வு. (௰)

அகமிதங்களில்லையறிவயர்வுமில்லை
யிகபரங்களென்றறியவில்லை-சகமு
மெரியினுக்குவெம்மையுருவென்னவிறைவா
வுருவதற்குநேரோயுணர்வு. (௰௧)

## ஐக்கியவிருப்பம்.

பூதமறிந்தவறிவுயிராம்போதமா
யூதமறிந்தவறிவீசனும்-பேதமறப்
லிற்றெங்கேயென்றான்புத்தேளிர்கோக்கண்ணீர்
மல்கித்தான்வீழ்ந்தான்மகன். (௰௨)

பின்னமறிந்தசெயல்போலப்பின்னமே
தன்னையறிந்ததுவுந்தற்செயலாய்-நின்ன
செயன்மாண்டதுகாண்சிவமென்றுனிச
னயன்மாலறியாவவன். (௰௩)

ஒருக்கவேறில்லாவுணர்வாம்பரமும்
பருக்கவிடயமெனப்பண்ணி-யருட்சொருபன்
பேசாதிருவென்னப்பேதங்காணுதிருந்தான்
வாசாமகோசரத்தேமாண்டு. (௰௪)

இலங்கவறிதனனவாகுமெங்குங்
கலங்கவறிதல்கனவாம்-புலன்கெட்ட
தெல்லாஞ்சுழுத்தியாமிம்மூன்றவத்தையினு
மல்லாததுகாணறிவு. (௰௫)

ஊனுமுயிருமுணர்வுமுடனிறந்து
யானுமிறந்துபரனிறந்து-கோனே
வடிவோடுமாறின்றிவாக்கிறந்துநீயிப்
படியேயிருக்கும்படி. (௰௬)

திரண்டசமவாய்ந்தீர்பாழிற்சீவ
னிரண்டாம்பாழிற்றோன்றுமீச-னிரண்டும்போய்
மூன்றும்பாழிற்றோன்றுமூன்றும்பதப்பொருளாஞ்
சான்றாருபில்லாத்தனி, (௰௭)

## சொருபதரிசனம்.

ஆவபாவாபாவந்தீர்ந்தவகோசரமு
மோவுமவத்தைகளினொன்றாக்கிச்-சிவபரந்
தானற்றிருந்ததனிப்பதங்காணீதென்று
மோனத்திருந்தான்முனி. (௰௮)

நோக்கினொன்றாய்நிகழநுனிதமறை
வாக்கினாற்கூறரியவான்பொருளை-நோக்கிச்



செயிர்தீர்ந்தேனென்றெழுந்தான் மைந்தன் சினையீன்
றுயிர்ந்தமீனதனுக்கொப்பு, (௰௯)

நிறைவுற்றதெவ்வாறுநின்மலனுந்தன்னை
யறிவித்தவாறறியலாகா-நிறைய
முழுத்துயாலானந்தமுந்நீரினுள்ளே
யழுத்துமூழைக்குடத்தினும். (௨௰)

## அநுபூதி.

இருந்தபடியேயிருந்தபடிகாண
விருந்தபடியேயிறைவ-னிருந்தபடி
யப்படியேயென்னுமஃதொழியவப்படியை
யெப்படியேயென்றுரைக்கேனியான், (௨௧)

ஊனானூனிற்குயிரானாயுள்ளுணர்வு
தானாய்ப்போயத்தமரானா-யானா
யென்னாடொண்ணாவிறையானாயாதுமாய்
நின்னாயென்னானாய்நீ. (௨௨)

காண்டகையேயென்கைக்கடனன்றேயில்லேனின்
[illegible]டகைதான்சூடார்க்கயலன்றே-மாண்டேன்
[illegible]யம்புவேயென்னினுரைதானுண்டோவெவ்வா
றியம்புவேனென்றறியேனியான். (௨௩)

நாரணனுநான்முகனுநாடப்பெறாரின்ன
மாரணமுஞ்சொல்லவறிகுதிலை-காரணநின்
செம்மாமலர்ப்பாதஞ்சென்னிப்பொறித்தாய்க்குக்
கைம்மாறுகாண்கிலேன்காண். (௨௪)

ஒல்லையுலகுபடைத்தழிக்கவன்றுணர்வால்
வல்லசொரூபாவென்வஞ்சமனக்-கல்லைத்
திரித்தருளவேண்டியொருதேசிகனுங்கோலந்
தரித்தருளவேண்டியதேதான். (உரு)

சொரூபவெனக்குன்றுணைமலர்த்தாள்சூட்டிற்
றிருவருநேரொப்பேமென்றே-யருளாலே
நின்னேரனையானேநீயுமருளாலே
யென்னேரனையேனியான். (உசா)

வந்திக்கச்சென்னிவாய்வாழ்த்தமனநினைக்க
விந்தத்திருக்கோலத்தெம்பெருமான்-வந்தெனக்குப்
பொன்னங்கழலருளிற்பூரணபோதச்சொரூப
வின்னம்பிறப்பேயினிது. (உஎ)

என்கைபணிசெய்யவெம்பெருமாற்கெம்பெருமா
னென்கைபணியாகவென்வாக்கு-நின்கீர்த்தி
கற்றென்றும்பாடக்கனிமனங்காணிறைவா
மற்றொன்றும்வேண்டேன்வரம். (உஅ)

அளித்தான்றிருமேனியைப்புலனுங்கொண்டு
களித்தான்பேரானந்தக்கண்ணீர்-குளித்தான்
குளித்தானப்பாலென்றுங்கூர்ந்தன்பான்மீண்டு
மளித்தானருட்சேவடி. (உகா)

ஆ திருவெண்பா-உ௱உ௰.

அமிர்தசாரமுற்றிற்று.